உ

ஸ்ரீ பரப் பிரஹ்மனே நம:





# தசோபநிஷத்



பத்து உபநிஷதங்கள் (தமிழ்) தொகுப்பு



ஸ்ரீ இராம ஜனனம் போற்றி

அக்ஷய வருடம் பங்குனி மீ" 24 உ (7-4-87) திருக்கடையூரில் நடைபெற்ற 60-வது ஆண்டு மணிவிழா ஞாபகார்த்தமாக வெளியிட்ட மலரின் தொடர்ச்சி இது, இரண்டாம் மலர். 29-6-88

தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும்—எந்த முயிர்
தானா குவானும் சரணாகு வானு(ம்)அருட்
கோனர்கு வானுங் குரு.

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ் ச குருஸ்த்வமேவ!
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ !!



திரு. R.T. பெருமாள் செட்டியார்,

திருமதி. ராஜம்மாள், தேர்வீதி, பவானி.

(R.T.P. இராமநாதன் செட்டியாரின் பெற்றோர்கள்)

## தசோபநிஷத் பொருளடக்கம்

பக்கம்.



இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்

உ

ஸ்ரீ பரப் பிரஹ்மனே நம:



# தசோபநிஷத்



பத்து உபநிஷதங்கள் (தமிழ்) தொகுப்பு

**ஸ்ரீ இராம ஜனனம் போற்றி**

அக்ஷய வருடம் பங்குனி மீ° 24 உ (7-4-87) திருக்கடையூரில் நடைபெற்ற 60-வது ஆண்டு மணிவிழா ஞாபகார்த்தமாக வெளியிட்ட மலரின் தொடர்ச்சிஇது இரண்டாம் மலர். 29-6-88

# தசோபநிஷத் - பத்து உபநிஷதங்கள்

## தமிழ் (தொகுப்பு) முன்னுரை

அன்னை **ராஜம்மாள்**, தந்தை **R. T. பெருமாள் செட்டியார்,** (நூல் ஜமக்காள வியாபாரம், பவானி.) ஆகிய பெற்றோருக்கு மூன்றாம் புத்திரனாக பிறந்து, கோயமுத்-தூரில் பஞ்சு, நூற்பு, நெய்தல் முதலியவற்றின் அடிப்படை செயல்முறை தொழில் படிப்பும், நேரடி பயிற்ச்சியும், வேலையும் பெற்றேன். எனது மாமனார் திரு. **J. K. கந்தசாமி செட்டியாரின்** குமாரர்கள் திரு. *J. K. K.* அங்கப்ப செட்டியார், திரு. *J. K. K.* சுந்திரம்செட்டியார், திரு. *J K.K.* நடராஜா, திரு. *J. K K.* முனிராஜா, ஆகிய நான்கு பேரும் சேர்ந்து புதியதாய் பஞ்சு–நூற்பாலைத் தொழிலில் புக விரும்பி 1954 ம் ஆண்டு என்னை உடன் இருந்து ஸ்தாபிக்கக் கொமாரபாளையம் அழைத்து வந்தனர், முதலில் சுந்தரம் நூற்பு ஆலை வடிவமைத்து, மிஷினரிகள் வாங்கி, நிறுவி, இயக்கி, உற்பத்தியை ஊக்குவித்து விரிவாக்கப்பட்டது; அது வளர்ந்து, பருத்து, கிளைகளைப் பரப்பியது. அதனால் கந்தசாமி ஸ்பின்னிங் மில்ஸ், பவானியில் புதியதாய் அதே முறையில் தோற்றுவிக்கப்பட்டது. புள்ளிக்கார் மில்ஸ் லிமிடெட் திருச்செங்கோடும் தி அழகப்பா காட்டன் மில்ஸ் இராஜபாளையமும் இவ்வட்டதில் வந்தது. பின் *J. K. N. M.* டெக்ஸ்டைல்ஸ் கொமார–பாளையம், புதியதாய் நிர்மாணிக்கப்பட்டது. எல்லா மில்களிலும் புதிய மிஷின்களும் தொழில் நுட்பங்களும் புகுத்தி நூதனமாக்கப்பட்டன. அத்துடன் இவை யாவற்றுக்காகவும் ஆரம்பம் முதல் கடந்த 34 ஆண்டுகளாக இந்தியாவில் பஞ்சு அதிகம் உற்பத்தியாகும் குஜராத், மஹாராஷ்டிரம், பஞ்சாப், ஆந்திரம், ஹரியானா, கர்நாடகம், தமிழ்நாடு, ராஜஸ்தான், மத்தியபிரதேசம் முதலிய பஞ்சு அறவாகும் சிறுகிராமங்களுக்கும் பலவித சீதோஷ்ணங்களிலும், கடுமையான பதட்டமான சமயங்களிலும், பஞ்சு தரம் பிரித்துக் கொள்முதல் செய்ய நேரில் பல முறை சென்றுள்ளேன்; தொழிளில் முன்னேற்றங்களை நேரில் கண்டறிய இரஷ்யா, ஜெர்மனி, சொக்கோஸ்லவேக்யா. ஆஸ்திரியா, இத்தாலி, ஸ்விஸர்லாந்து, பிரான்ஸ், இங்கிலாந்து முதலிய மேற்குநாடுகளுக்கும் சிலோனும் சென்று இருக்கிறேன். எனது " 60 ஆண்டு மணிவிழா மலர் " அக்ஷய வருடம் பங்குனி மாதம் 24–ம் தேதி ஸ்ரீ இராமநவமி அன்று (7—4—1987) திருக்கடையூரில் வெளியிடப்பட்டது. அதன் தொடராக இம்மலர் எனது மாமியார், அன்னை *J. K. K.* **சம்பூரணி அம்மாள்** ஆறாம் ஆண்டு குருபூஜையின் போது (29—6—88) வெளியிடப்படுகிறது, வினியோகிக்கப்படுகிறது.

# தசோபநிஷத் பொருளுரை

ஸ்ரீ கைலாஸ் ஆஸ்ரமம், நெரூர், தவத்திரு. **சதா சிவானந்த ஸ்வாமிகளிடம்** சிலவருடத் தொடர்பால் ஆத்மீகச் சுடர்தூண்டிவிடப்பட்டு விளங்குகிறது. அடுத்துத் தொடர்ந்து ஸ்ரீ கைலாஸ் ஆஸ்ரமம் நெரூரின் தலைவராகவும் இன்னும் பற்பல ஸனாதன ஹிந்துமத ஸ்தாபனங்களில் முக்கிய உருப்பினராக இருந்து கொண்டு சன்மார்க்கத்தைப் பரப்பிவரும், உலகம் சுற்றிய தவத்திரு **தேஜோமயா–னந்தா** அவர்கள்; இங்கு மாதம் இருமுறை கொமாரபாளை–யத்தில் நடத்தும் அந்தர்யோக உரைகள் மூலமும்; (பவானி) கொமாரபாளையம் எடப்பாடி ரோட்டிலிருக்கும் ஆனந்தாஸ்–ரமத்தில், கோவிலூர் மரபு தவத்திரு. **சோம. சோபால ஸ்வாமி** அவர்கள் மாலை 7 முதல் 8 மணிவரை தினந்தோறும் நா்நா ஜீவ வாதக் கட்டளை முதல் ஞான வாசிட்டம் ஈறாக உள்ள 16 சாஸ்திரங்களும் வரிசைக்கிரமமாக நடத்தப்படுவதன் மூலமும்; ஸ்ரீ ராமகிருஷ்ணமடத்தின் வாயிலாக, உயர்திரு. '**அண்ணா**' அவர்கள், உபநிஷத்ஸாரம், ஸ்ரீ ராமகிருஷ்ணதீபம் எனும் உரையுடன் பத்து உபநிஷத்தங்களின் ஸமஸ்கிருத, தமிழ்மூலமும், தமிழ் பொழிப்புரையும், கீதை முதலிய குறிப்புரைகளும் அருளியிருக்கின்றதன் மூலமும் சிறந்த எளிய உபமானங்களுடன் மெய்ஞான ஆர்வத்தைத் தூண்டுவித்து வளர்த்து ஞானச்சுடர் பிரகாசிக்கச் செய்துவருகின்றனர். இம்மலர் தமிழ் மட்டுமே படிக்கக்கூடிய ஆர்வமுள்ள முமுக்ஷுக்கள் உபநிஷத கருத்துக்களை ஓதியுணர சுட்டுனரும் சங்கேதக் குறிப்பாக மேற்கோளாக யுத்தமான ஆலோசனை கூறத்தக்கதாக உபயோகப்பட விரிவு அஞ்சி சிலவற்றைச் சுருக்கியும், சில பகுதிகள் மட்டும் பிரித்தெடுத்தும், பெரும்பாண்மை முழுமையும் அச்சிட்டு ஞானதானமாக வழங்குகிறேன். அன்பர்கள் ஓதியுணர்வார்களாக. மேற்கொண்டு இம்மலரில் காணக்கூடிய உள்ளுரையும் ஆழ்ந்தஆத்மீகத் தத்துவார்த்த ஞான விளக்கங்களை மேற்கூறிய குருமார்களிடமும் மற்றும் அவரவர் தம்தம் ஞான குருமார்களிடமும் நேரில் சமயம் வாய்க்கும் போது எல்லாம் பெறலாம். குருவருளும் திருவருளும் வேண்டிப் பிரார்த்திக்கிறேன். எது உண்மையில் உயர்ந்த நன்மையோ அதை எனக்குக் கூட்டிவைத்தருளல் வேண்டும். செய்கையில் கடமையும், உள்ளத்தில் அன்பும் எங்கும் எப்போதும் வேண்டும்.


அன்பன்,

**R. T. P. இராமநாதன்.** LTM; (பொதுமேலாளர்)

436, சேலம் மெயின் ரோடு,

பவானி-கொமாரபாளையம் - 638183.

## கடவுள் வாழ்த்து.

உ/க/5

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்-நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமசி வாய வே.

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்
ஆதிசக்தி மஹாசக்தி பராசக்தி ஓம்
இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்தி ஓம்
ப்ரம்மசக்தி விஷ்ணுசக்தி சிவசக்தி ஓம்.

ஒற்றைத் திகிரியானை ஓரேழ் பரியானை
கற்றைக் கதிரோனைக் கைம்மலரோன்-மற்றினியே
பொய்கையில் நீராடி போற்றிப் புதுஉளத்தால்
வைகறையில் வாழ்த்திடுவம் யாம்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இன்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்.

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றா றாக ஆரியர்க் காக ஏகி அஞ்சிலே
ஒன்று பெற்ற அணங்கைக்கண்டு அயலா ரூரில் அஞ்சிலே
ஒன்றை வைத்தான் அவனெம்மை அளித்துக் காப்பான்

**சாந்தி பாடம்:—**

ஓம் அது பிரம்மம் பூர்ணம். இதுவும் உலகமும் பூர்ணம். பூர்ணமாகிய சிரேஷ்டமான பிரம்மத்திலிருந்து பூர்ணமாகிய உலகம் தோன்றி உதயமாயுள்ளது. பூர்ணமாகிய உலகுக்கு பூர்ணமாகிய பிரம்ம பாவனையை அறிந்தால் பூர்ணமாகிய பிரம்மமே எஞ்சி நிற்கிறது

1. ஓம் தோன்றி மறையும் இவ்வுலகில் தோன்றி மறைவதாய் உள்ளது எது உண்டோ அது அனைத்தும் ஈசனால் வியாபிக்கப் பட்டதாக காணவேண்டும். ஈசுவர பாவனையால் ஏற்பட்ட அந்த தியாகத்தால் உன்னை ரக்ஷித்துக் கொள். உயிரை ரக்ஷிப்பதற்கு மட்டும் அவசியமான பொருளை ஈசுவரன் கொடுத்ததென ஏற்றுக் கொண்டு வாழ்வாயாக. எவருடைய் பொருளுக்கும் ( தன்னுடையதேயாயினும் பொய்யுடைமை என்று ) பேராசைப்படாதே. (ஞானநிஷ்டை)

2. மனித வாழ்வை இவ்வுலகில் விரும்புபவன் விதித்த கருமங்களை பரமாத்மாவுக்கே அர்ப்பணம் என்று செய்து கொண்டே நூறாண்டு வாழ விரும்பட்டும். இதுவே உனக்கு வழி. (எவ்வழியில்) கருமப்பற்று மனிதனிடம் தொடராதோ அதற்கு இதைவிட வேறு வழி இல்லை. (கர்மநிஷ்டை) (ஞானம் ஏற்பட்டதும் கருமம் நழுவிப் போகும். அப்போது ஸந்தியா வந்தனம் காயத்திரியிலும், காயத்ரி பிரணவ ஜபத்திலும் பிரணவம் ஸமாதியிலும் மணியின் நாதம் போல் போகப் போக ஒடுங்கும்)

6. எவன் இருப்புள்ள அனைத்தையும் ஆத்மாவினிடத்திலேயே பார்க்கின்றானோ, இருப்புள்ள அனைத்தினிடத்தும் ஆத்மாவைப் பார்க்கின்றானோ அப்போது எதையும் வெறுப்பதில்லை.

11. எவன் வித்தையையும் (தேவதைகளின் உபாசனை-தேவலோகம்), அவித்தையையும் (விதித்த கர்மங்கள்-பித்ருலோகம்), இரண்டையும் ஒன்றாகக் கூட்டி அறிகின்றானோ அவன் அவித்தையினால் சாவைத் தாண்டி வித்தையினால் சாகாத் தன்மையை எய்துகின்றான்.

15. சூரியனே! பொன்மயமான வட்டியால் ஸத்தியத்தின் முகம் மறைக்கப்பட்டுள்ளது ஸத்தியத்தை நாடும் என்னுடைய பார்வைக்கு நீ அந்த மறைப்பை நீக்கியருள்வாயாக. (ஜீவனுடைய அறிவை உலகப் பகட்டு மறைக்கிறது. அதை நமஎன்று வணங்கி உபாசித்தால் கர்மங்கள் இவனை வணங்கி நிற்கும்)

16. உலகை உயிர்ப்பித்து காப்பவனே தனிவழியில் சஞ்சரிப்பவனே அனைத்தையும் அடக்கியாள்வோனே சூரியனே பிரம்ம புத்திரனே உன் கிர்கணங்களைச் சுருக்கி உள் ஒளியை உள்ளே வாங்கிக்கொள், உன்னுடைய உத்தமமான மங்கள வடிவம் எதுவோ அதை நான் பார்க்கும்படி அருள்வாய். இந்த சூரிய மண்டலத்திலுறையும் புருஷன் எவனோ அவனே நான் ஸோனஹமஸ்மி-என்னும் மஹாவாக்கியம் உபதேசம்.

17. மூச்சுக் காற்று அழிவில்லாத வாயுவை அடையட்டும் பிறகு இந்த உடல் சாம்பலாக முடியட்டும். ஓங்காரஸ்வரூபியும் ஸங்கல்ப ஸ்வரூபியும் அக்கினி ஸ்வரூபியுமான பகவானே என்னை நினைப்பீர். என்னால் செய்யப்பட்டதை நினைப்பீர் (17-ம் 18-ம் மரண சமயத்தில் சொல்லதக்கவை)

18. அக்கினியே எங்கள் செயலால் உண்டானசெல்வத்தை யனுபவிப்பதற்கு நல்ல மார்க்கத்தில் எங்களை அழைத்துச் செல்வீர் தேவனே எல்லா எண்ணங்களையும் நீர் அறிவீர் நமஸ்கார வசனங்களை வெகுவாக சமர்பித்து உம்மை பூஜிக்கிறோம். மற்ற உபாயம்அனைத்தினின்று விடுபட்ட ஜீவனைப் பிரம்மத்திடம் வைத்து விடவேண்டியது. இதுவே ஞானமும் யோகமும், ஏனையவை நூல்களின் விரிவு. ஆத்ம ஞானமில்லாத கருமமும் உபாஸனையும் ஸம்ஸார இருளில் அழுத்துமேயன்றி முக்திக்கு பயன் படாது. எனினும் கருமமும் உபாஸனையும் சேர்த்து தக்க முறையில் ஞானத்துடன் அனுஷ்டிக்கப்பட்டால் படிப்படியாக ஸாதகனைக் கைதூக்கிவிடும். சரீரம் விழுவதற்கு முன்னர் அது ஒரு பிடி சாம்பலாவதெனக்கண்டு, அதில் பற்றை அறவே ஒழித்து ஓங்கார உள்ளொளியாய் விளங்கும் பரஞ்சோதியைப் பணிந்து போற்றி அதனிடம் ஆத்மஸமர்ப்பணம் செய்தல் வேண்டும்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# 2. கேனோபநிஷத்

ஓம் என்னுடைய அங்கங்களும், வாக்கும், பிராணனும், பலமும், கண், காது முதலிய எல்லா இந்திரியங்களும் தம் தம் தொழிலை நன்கு செய்யும் திறனுடையனவாகட்டும். அனைத்தும் உபநிஷத்தில் விளங்கும் பிரம்மமே. பிரம்மம் என்னை விட்டு விலகலாகாது. நானும் பிரம்மத்தை விட்டு விலகலாகாது அந்த விடாத உறவு நிலைபெறட்டும் என்று மேன் மேலும் பிரார்த்திக்கின்றேன். ஆத்மாவில் மகிழ்ந்து வாழ்பவர்களிடம் உள்ள உபநிஷத் தருமங்கள் எவையோ அவை என்னிடம் நிலை பெறட்டும் என பிரார்த்திக்கின்றேன். மூவகையிலும் சாந்தி நிலவுக. ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

1.1.) எவரால் விரும்பப்பட்டும் ஏவப்பட்டும் மனம் விஷயங்களில் விழுகிறது? எவரால் ஏவப்பட்டு முக்கியப் பிராணன் தன் தொழிலில் பிரவேசிக்கின்றது? எவரால் விரும்பப்பட்டு ஜனங்கள் இம்மாதிரி வார்த்தைகளை பேசுகிறார்கள்? எந்த தெய்வம் கண்ணையும் காதையும் தம் தம் தொழிலில் ஏவுகிறது?

1.2.) காதின் சக்திக்குக் காரண சைதன்யமாக காதாயும், அதே போல் மனதுக்கு மனதாயும், வாக்குக்கு வாக்காயும், உள்ளது எதுவோ அதுவே அந்த ஆத்மாவினுடைய பிரகாசத்தால் இது எல்லாம் பிரகாசிக்கின்றது. பிராணனுக்குப் பிராணனாகவும் கண்ணுக்குக் கண்ணாகவும் உள்ளது. அதை அறிந்த தீரர்கள் எல்லாப் பற்றுக்களையும் இங்கேயே ஒழித்து இவ்வுலகை விட்டுச் சாகாத்தன்மை எய்துகின்றனர். இந்திரியங்களில் உள்ளுரையும் அழியாத சைதன்யம் ஆத்மா என்று கண்டு கொண்டமையால் சாகாத்தன்மை அடைகிறார்கள்; உயிர்களுக்குள் உயிராய் இருப்பதால். 1.3.)அங்கே கண் செல்லாது, வாக்கு செல்லாது. மனமும் செல்லாது அதை நாம் உள்ளபடி அறியமாட்டோம். ஆகையால் அதைப் பற்றி உபதேசிக்கும் வகையும் தெரிய வில்லை, அது அறிந்த பொருட்களைவிட வேறு அறியாத பொருட்களுக்கும் அப்பாற்பட்டது. என்றிவ்வாறே இவ்விஷயத்தைக் கூறிய பூர்வாசிரியர்களிடம் கேட்டுள்ளோம். (சரீரத்தை இயக்கும் சக்தி இயந்திரியங்களுடையதன்று, ஆத்மாவி னுடையதே.) 1.4.) எது வாக்கால் விளக்கப்பெறாதோ ஆனால் வாக்கு எதனால் விளக்கப் பெறுமோ. எதை ஒருவன் மனத்தால் உணருவதில்லையோ ஆனால் மனது எதனால் உணரப்பெறும் என்று கூறுகிறார்களோ, எதைக் கண்ணால் பார்பதில்லையோ ஆனால் கண்களை எதனால் பார்க்கிறானோ, எதைக் காதால் கேட்பதில்லையோ ஆனால் காது எதனால் கேட்பதாகிறதோ, எதை மூக்கால்

முகர்வதில்லையோ ஆனால் மூக்கு எதனால் முகர்வதாகிற தோ அதுவே பிரம்மம் என்று நீ அறி. எதை இது பிரம்மம் என்று உபாசிக்கிறார்களோ அது பிரம்மம் அன்று.

2.1.) நன்றாக அறிந்து கொண்டேன் என்று நீ எண் ணுவாயாகில்இந்த பிரம்மத்தின் எந்த ரூபத்தை இங்கு அறிந் திருக்கிறாயோஅதுஅற்பம்என்பது நிச்சயம்;இந்தபிரம்மத்தின் எந்த ரூபத்தை தேவதைகளிடம் அறிந்திருக்கிறாயோ அதுவும் அப்படியே. ஆகையால் பிரம்மம் உனக்கு இன்னும் விசாரிக்க வேண்டியதாகவே இருக்கிறது. 2.4.) ஒவ்வொரு போதத்திலும் விளங்கும் அது அறியப்படாமல் அறியும் வஸ்துவாய் நிற்-கிறது, என்பது முடிவான கருத்து மதம் அதனால் சாகாத்தன் மையை ஒருவுன் அறிகிறான். ஆத்மாவிடமிருந்தே உண்மை யான வீரியத்தைப் பெறுகிறான் (இந்த ஆத்மா பலமில்லாத வனால் அடைய முடியாது. உண்மையான ஆத்மபலம் பலத். தாலேயே அமிருதநிலை பெறட்டும்.) 3.2.) இந்த விஜயம் எங்களுடையது. இந்தப் பெருமை எங்களுடையது என்ற் தேவர்களின் தவறான எண்ணத்தைப் பிரம்மம் உணர்ந்து அவர்களிடையில் தோன்றிற்று அந்த யக்ஷவடிவம் என்ன வென்று தேவர்கள் உணரவில்லை 3.5.) ஜாதவேதன் (அக்கினி) பூமியில் எது உண்டோ அது எல்லாவற்றையும் நான் எரித்து விடக்கூடும் என்றான். மாதரிச்வா (வாயு) பூமி யில் எது உண்டோ அது எல்லாவற்றையும் நான் தூக்கக்கூடும் என்றான். பிரம்மம் வைத்த ஒரு புல்லை அக்கினி எரிக்கவோ வாயு தூக்கவோ முடியவில்லை. 3.12) தேவேந்திரன் இமவான் புத்திரி உமாதேவியைக் கண்டு யக்ஷவடிவம் என்ன என்றான்.

4.1.) அது பிரம்மம் அந்தப் பிரமத்தின் விஜயத்தில் தான் நீங்கள் பெருமை கொள்ளவேண்டும் என கூறினாள். இந்திரன் தெரிந்தான். 4.2.) எக்காரணத்தால் அக்கினியும், வாயும், இந்திரனும் இதை பிரம்மத்தை நெருங்கிய பொருளா கக் கண்டார்களோ, மேலும் இதைப் பிரம்மம் என்று முதன் மையாகத் தெரிந்து கொண்டார்களோ அக்காரணத்தால் இந்த தேவர்கள் மற்றவர்களைவிட சிறந்தவர்களாயினர். 4.4) இந்தப் பிரமம் மின்னலின் மின்னல் போன்றதாம் இமை கொட்டுதல் போன்றதாம் 4.5.) இதை மனது சென்றடைவது போலும் அதனால் இதை அருகில் ஸ்மரிப்பது போலும் அடிக் கடி பளிச்சென்றுதோன்றி மறையும் பாவனை உண்டாகிறது. இது அத்தியாத்மம். 4. 8.) தவம் அடக்கம் பற்றற்ற கருமம் என்பவை அதன் பாதங்கள், வேதங்கள் எல்லா அங்கங்களும் ஸத்தியம் உறைவிடம். ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# 3. கடோபநிஷத்

ஓம் குரு சிஷ்யர்களாகிய எங்களை இருவரையும் சேர்த்து பிரம்மம் காப்பாற்றட்டும், சேர்த்துப் போஷிக்கட்டும் இருவரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக, எங்கள் அத்தியாயனம் ஒளி பொருந்தியதாக வேண்டும். நாங்கள் ஒருவரையொருவர் பகைத்துக் கொள்ளாமலிருக்க வேண்டும் மூவகையிலும் சாந்தி நிலவுக. ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

1.3.) நீரும் குடித்தாகிப் புல்லுந் தின்றாகி பாலுங் கறந்தாகி இந்திரியமும் அற்றதா யுள்ள அவற்றை (கிழட்டுப் பசுக்களை) கொடுப்பவன் உண் மையில் ஆனந்தமற்ற உலகங்களையே அடைவான். 1.6.) முன்னோர் எங்ஙனம் இருந்தனர் என்பதை ஊன்றிப் பார்த்து அப்படியே மற்றயோர் இருக்கவேண்டும் என்பதையும் பார்த்து அங்ஙனமே நடந்து கொள்ளுதல் வேண்டும். மனிதன் பூண்டு போல் அழிகிறான் மீண்டும் பூண்டு போல் உண்டாகிறான். 1.8.) எந்த அறிவீனனான மனிதனுடைய வீட்டில் ஒரு பிரா மணன் சாப்பாடின்றித் தங்குகிறானோ அவனுடைய ஆசை களும் ஸங்கல்பங்களும் நல்லோரிணக்கமும் நல்ல வார்த்தை களும் தேவ பூஜையும் மனிதசேவையும் மக்களும் பசுக்களும் ஆகிய அனைத்தையும் அக்கினி வடிவாகிய அவன் பொசுக்கி நசிக்கச் செய்கிறான். 1.10.) யமனே! என் தகப்பனார் கௌதமர் என்னைக் குறித்துச் சாந்த சங்கல்ப முடையவரா கவும் கலங்கமற்ற மனதுடையவராகவும் கோபமில்லாதவரா கவும் ஆகட்டும். உன்னால் விடப்பட்ட என்னைப் பிரீதியுடன் ஏற்று ஆசீர்வதிக்கட்டும் இது மூன்றினுள் முதல் வரமாக கேட்கிறேன். 1.12.) சுவர்கத்தில் சிறிதும் பயமில்லை, அங்கு நீர் (யமன்) இல்லை. கிழத்தனத்தால் பயப்படுவதில்லை. பசி, தாகம் இரண்டையும் கடந்து சோகமற்றவனாய் சுவர்க்க லோகத்தில் அடைந்தவன் இன்புறுகிறான். 1.13.) ஸ்வர்க்க ஸம்பந்தமான அக்கினி வித்தையை நீ அறிவாய் யமனே! சிரத்தையுடன் கூடிய எனக்கு நீ அதை உபதேசித்தருள வேண்டும், ஸ்வர்க்கலோகம் எய்தியவர்கள் அடையும் தெய் வீக நிலை எதுவோ அதை அதைப் பற்றிய ஞானத்தை இரண்டாவது வரமாக கேட்கிறேன். 1.14.) சுவர்க்க லோ கத்தை யடைவதற்க்குச் சாதகமாகவுள்ள அக்கினி வித்தை யை மேலும் உலகனைத்தும் நிலை பெறும் இடமாயும் புத்தி குகையில் வைக்கப்பட்டுள்ளதாயும் நீ அறிந்துகொள். கோஷ் டாக்கினி சாப்பிட்டதை வயிற்றில் சமைக்கிறது. தர்சனாக்கினி ரூபங்களை முகத்தில் காண்கிறது. ஞானாக்கினி நல்லதுங்

கெட்டதுமான கர்மங்களை இருதயத்தில் அறிகிறது. ஆத்மா யஜ்ஞும் செய்பவன். வெளியில் நிகழும் யஜ்ஞும் உள்ளே நிகழும் யஜ்ஞுத்தின் பிரதீகமே. 1.20) பூதவுடலை விட்டுக் கிளம்பின ஜீவன் விஷயத்தில் இவன் இங்ஙனம் இருக்கிறான் என்று சிலரும் அவன் அங்ஙனமில்லை என்று சிலரும் எதைப் பற்றி வாதிக்கின்றனரோ அதைப்பற்றிய உண்மையை உனது உபதேசத்தால் அறியகடவன் இதுவே மூன்றாவது வரம். 1.27) மனிதன் ஒரு போதும் பொருளால் திருப்தியடையக் கூடியவனன்று. உன்னை தரிசித்தால் நிச்சயமாய் வேண்டிய பொருளை யடைவோம். அதைத் தனியாகப் பிரார்த்திக்க வேண்டியதில்லை. நீ எங்களை ஆண்டு அனுக்கிரகிக்கும் வரை வாழ்வையும் அடைவோம். ஆகையால் என்னால் விரும் பப்படும் மூன்றாவது வரம் நான் ஏற்கெனவே கேட்ட அதுவே யாகும்.

2.2) உயர்ந்த நன்மையைத் தரும் மோக்ஷசாதனமாகிய சிரேயஸ்ஸும், குறுகிய பார்வையுள்ளவர்களுக்குப் பிரியமாய்த் தோன்றும் சிற்றின்ப சாதனமாகிய உள்ளத்தைக் கவரும் பிரிய மான காமங்களை மாயப் பொருள் வழியாகிய பிரேயஸ்ஸும் மனிதனை நாடி வருகின்றன. தீரன் அவைகளை நன்கு பரிசீ லனை செய்து அவற்றின் வேறுபாட்டை உணர்கிறான். தீரன் பிரேயஸ்ஸை விட்டு சிரேயஸ்ஸை வரிக்கிறான். மந்த புத்தி யுள்ளவன் பொருளை ஈட்டுதலிலும் காப்பாற்றுவதிலும் நோக்கம் கொண்டு பிரேயஸ்ஸை வரிக்கிறான். 2.4.) அவித் தையும், வித்தை என உணரப்படுவது எதுவோ அதுவும், கொண்டு ஒளி இருள் செல்லும் வழிகள் ஒன்றுக் கொன்று வெகு தூரம் வேறுபட்டவை. நசிகேதஸ உன்னை வித்தையை நாடின வன் என அறிகின்றேன். ஏனெனில் பலவகைப் பட்ட காம போகங்களும் உன்னை அசைக்கவில்லையல்லவா? 2.11.) ஆசைகளின் பூர்த்திக்கு எல்லை நிலமும், உலகுக் கெல்லாம் உறைவிடமும், கருமங்களுக் கெல்லாம் முடிவான பயனும், பயமின்மை நிலைபெறும் ஸ்தானமும் எல்லோராலும் போற்றப் படுவதும், அளவுக்கடங்காததும், எங்கும் பரந்து நிற்பதும், உயிருக்குயிராய் உள்ளதும் ஆகிய ஆன்மநிலையை திடசித்தத் தால் உணர்ந்து நசிகேதஸ! தீரனாகிய நீ அநித்தியமாகிய அனைத்தையும் தாண்டிவிட்டாய். (அழியும் பொருளும் பகவா னுக்கு அர்ப்பணிக்கப்பட்டால் அழியாப் பலனைப் பெறுவதற்கு சாதனமாம்.) 2.12) காண்பதற்கு அரியதும், அனைத்திலும் ஊடுருவி உள்ளுறையும் மறைபொருளும் புத்தி குகையில் நிலை பெற்றதும், உடல் தோறும் வியாபித்து நிற்பதும்,

பழமையான பொருளும் ஆகிய அந்த திவ்ய தேஜோமயத்தை அத்தியாத்ம யோகத்தால் உணர்ந்து தீரனானவன் இன்ப துன்ப கிளர்ச்சிகளை விட்டவனாகிறான். (ஆத்மாவின் உண்மை சொரூபத்தை தனக்குள் கண்ட பின் மகிழ்சியும் துக்கமும் இரண்டும் அற்றுப் போகும்.) 2.13.) இதைக் கேட்டு. உள்ள படி உணர்ந்து, தர்ம மூலத்தை விவேகத்தால் பிரித்தெடுத்து அணுவாகிய இவ்வான்மாவை அடைந்த மனிதன் எவனோ அவன் ஆனந்திக்கத்தக்கதை யடைந்து ஆனந்திக்கிறான். மோக்ஷவீடு நசிகேதஸுக்கு வழி திறந்திருப்பதாக நான் (யமன்) எண்ணுகிறேன். 2.15. யமன் கூறுவது: வேதங்கள் எல்லாம் எந்தப் பொருளைப் போற்றுகின்றனவோ, தவங்கள் எல்லாம் எதை விரும்பி பிரம்மச்சரியத்தை யனுஷ்டிக்கிறார்களோ அந்தப்பதத்தை சுருக்கிக் கூறுவேன். அது ஓம் என்பதாகும் 2.16) இந்த அக்ஷரமே (அபர) பிரம்மம். இந்த அக்ஷரமே பரப்பிரம்மம் இந்த அக்ஷரத்தை அறிந்தால் ஒருவன் எதை விரும்புகிறானோ அது அவனுடையதாகிறது. (பரமானால் அறிய வேண்டும். அபரமானால் அடையவேண்டும். சூரியன் உதிப்பது அஸ்தமிப்பது என தோன்றுவதுபோல் ஆத்ம சரீரத்தில் புதுவது போலும் விடுவது போலும் தோன்றுகிறது பிரகிருதியால்.) 2.18) இதனுண்மையைத் தெளிவுரக் கண்ட வன் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை. இந்த ஆத்மா எங்கிருந்தும் உண்டாகவில்லை. இதிலிருந்தும் எதுவும் உண் டாகவில்லை. இது பிறப்பற்றது, என்றுமுள்ளது அழிவற்றது அனைத்துக்கும் முன்னுள்ளது. சரீரம் அழிக்கப்படும் போது அழிக்கப்படாமல் நிற்பது. 2.20.) அணுவுக்கும் அணுவாயும் பெரிதுக்கும் பெரிதாயும் உள்ள ஆத்மா இத்த ஜீவனுடைய உள்ளத்தில் உறைவது. ஆசை நீங்கியவன் சோகமற்றவனால் அந்தக்காரணங்களின் தெளிவால் ஆத்மாவின் பெருமை காண் கிறான்.2.21) வீற்றிருந்தே அதுதூரச்செல்கிறது. படுத்திருந்தே அது எங்கும் போகிறது. என்னுள்ளே இன்ப வடிவிலும் துன்ப வடிவிலுமிருக்கும் அந்த தெய்வத்தை நானே அறிந்துகொண் டாலன்றி வேறு யார் அறியக்கூடும். 2.23) வேதங்களைக் கற்றதாலோ, நுண்ணறிவினாலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா ஒரு சாதகனால் அடையப்படுவதன்று. ஸாத கள் எப்போது ஆத்மா ஒன்றையே ஆத்மாவினால் பிரார்த்திக் கின்றானோ அப்போது அவனால் அடையப்படும். அவனுக்கு அப்போது இந்த ஆத்மா தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தை பிரகாசப்படுத்துகின்றது. 2.24) துர் நடந்தையினின்று வில காதவனும், இந்திரியங்களை அடக்காதவனும், மனத்தை

ஒருமுகப்படுத்திச் சாந்தி எய்தாதவனும் பிரஜ்ஞானத்தால் இந்த ஆத்மாவை அடையமாட்டான்.

3.3) சரீரத்தை தேராகவும் மனத்தைக் கடிவாளமாக வும் புத்தியை சாரதியாகவும் ஜீவனைத் தேரில் வீற்றிருப் பவனாகவும் அறி. 3.4.) இந்திரியங்களைக் குதிரைகள் என்றும் விஷயங்களை அவைசெல்லும் பாதைகள் என்றும் கூறு வர். சரீரம் இந்திரியம் மனம் இவற்றுடன் கூடிய ஜீவனையே போக்தா என்று ஞானிகள் கூறுகின்றனர். 3.5.) அடக்கப் படாத மனதுடனும், விவேகமில்லாத புத்தியுடனுங் கூடியவன் எவனோ அவனுக்கு ஸாரதிக்கடங்காத துஷ்டக் குதிரைகள் போல் இந்திரியங்கள் வசப்படமாட்டா. 3.6.) எப்போதும் அடக்கப்பட்ட மனதுடனும் விவேகமுள்ள புத்தியுடனுங் கூடி யவனுக்கு ஸாரதிக்கடங்கிய நல்ல குதிரைகள் போல் இந்தி ரியங்கள் வசப்பட்டவையாம். 3.7.) எப்போதும் விவேகமற்ற வனாயும் அடங்காத மனமுடையவனாகவும், அழுக்குடையவ னாகவும் உள்ளவன் சேரவேண்டிய பரமபதமாகிய இடத்தை சேரமாட்டான். மீண்டும் மீண்டும் பிறந்து கொண்டிருப்பான். 3.10.) இந்திரியங்களைவிட அவைகளுக்குக் காரணமான சூக்ஷ்மபூதங்கள் மேலானவை. அவைகளைவிட மனம் மேலா னது. அதைவிட புத்தி மேலானது. புத்தியைவிட மகத்தான ஸூத்ராத்மா (ஸமஷ்டிபுத்தி) மேலானது. 3.11.) ஸூத்ராத் மாவைவிட மூலப்பிரகிருதி மேலானது. அதைவிட புருஷன் மேலானவன். புருஷனைவிட மேலானது ஒன்றுமில்லை. அதுவே உன்னதமான எல்லை நிலை. 3.13) நுண்ணறி வுடைய விவேகி வாக்கை மனதில் ஒடுக்கி, அதைப் பிரகாஷ ரூபமான புத்தியில் ஒடுக்கி புத்தியை ஸூத்ராத்மாவில் ஒடுக்கி அதை எல்லாம் ஒழிவடையும் பரமாத்மாவிடம் ஒடுக்க வேண்டும் 3.15.) சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தகங்களுக்கு அப்பாற்பட்டதும், மாறுபாடில்லாததும், என்றுமுள்ளதும் ஆதியந்தம் இல்லா ததும், மகத் தத்துவத்துக்கு மேலானதும், நிலை பிறழாததும். எதுவோ அதையறிந்து ஒருவன் மரணத்தின் வாயினின்று விடுபடுகிறான் (ஒளி பொருளாகிய வெய்யிலுக்கு வடிவமில்லை வெய்யிலின் வேறு அல்லாத நிழலுக்கு வடிவம் உண்டு. பரமாத்மா ஜீவாத்மா தடை (குறை மாயை) நீங்கினால் இரண்டும் ஒன்றாகிவிடும்.)

4.1.) பரமேஸ்வரன் இந்திரியங்களை வெளிநோக்கு டையவையாச் சிருஷ்டித்துள்ளார். ஆகையால் மனிதன் வெளித்தோற்றங்களையே பார்க்கிறான். எவனோ ஒரு தீரன்

சாகா நிலையை விரும்பி அடக்கி உள் முகமாய்த் திரும்பப் பெற்ற பார்வையுடையவனாய் பிரத்யகாத்மாவை பார்க் கிறான். 4 3.) சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த வடிவான இந்திரிய நுகர்ச்சிகளை எந்த அறிவால் மனிதன் அனுபவிக்கிறானோ அந்த அறிவாலேயே அவைகளை பிரித்துக் காண்கிறான். அதற்க்கு (சாக்ஷிக்குப்) புறம்பாக உள்ளது எது? இதுவே இந்த சாக்ஷியே ஆத்மாவாகிய அநு. 4.4.) கனவிலும் நனவிலும் இரண்டினுள்ளும் உள்ளவற்றை எதனால் ஒருவன் தொடர்ச் சியாகக் காண்கிறானோ அந்தப் பெரியதும் எங்கும் நிறைந்தது மான ஆத்மாவை உணர்ந்து புத்திமான் துன்புறான். 4 5.) சேமித்துவைத்த கரும் பலனாகிய தேனை அருந்திக் கொண்டு அண்மையில் ஜீவவடிவாகவும் சென்றதற்கும் வருவதற்கும் யஜமானனாகவும் உள்ள ஆத்மாவை எவன் அறிகிறானோ அவன் துன்பத்தினின்று தன்னைக் காத்துக் கொள்ளக் கவலைப் படமாட்டான். வேற்றுமை இன்மையால் அவனுக்குத் துன்பமு மில்லை. பயமில்லை அதுவே ஆராயும் அந்நிலை. 4.8 ) தீயைக் கடைந்தெடுக்கும் அரணிக்கட்டையில் மறைந்திருக்கும் தீயைப் போலும், கர்ப்பிணிகளால் நன்கு மறைத்துக் காக்கப்படும் கருவைப் போலும், நாள் தோறும் பூஜிக்கப்படும் அக்கினி ஜாக்கிரதையுடன் ஹோமம் செய்யும் மனிதர்களால் காக்கப் படுவது போலும், உள்ளத்தில் ஆத்மா மறைத்து வைக்கப் பட்டுள்ளது. அதுவே ஆராயும் அப்பொருள். 4 11) இது மனத்தாலேயே அடையப்பட வேண்டும். இங்கு சிறிதும் வேற்றுமையில்லை. இருப்பதெல்லாம் எவன் இங்கு வேற்றுமை காண்கிறானோ மரணத்தினின்று அவன் மரணத்தையே அடை கிறான். மனத்திலேயே இருக்கிறது.) 4.14.) மலையின் உச்சியில் பெய்த நீர் மலைச்சாரல்களில் பலவாறாகச் சிதறிப் பாய்வதுபோல் தர்மங்களைத் தனித்தனியாக பிரித்துக் காண்ப வுன் அவ்வேற்றுமைகளைப் பின்பற்றியே ஓடுகிறான். 4.15) எங்ஙனம் சுத்தமான ஜலத்தில் விடப்பட்ட சுத்த ஜலம் அது போலவே ஆகிறதோ (நதிகள் சமுத்திரத்தில் கலந்து ஒன்றாக சமுத்திரமாவது போல்) அங்ஙனமே உண்மை உணர்ந்த முனியின் ஆத்மா ஆகிறது. (நாம ரூபங்களினின்று விடுபட்டு உயர்ந்ததற் கெல்லாம் உயர்ந்த தேஜோமயமான புருஷனை அடைகிறான். அதுவாகவே ஆகிறான்.)

5.3) அவனே பிராணனை மேலே கிளப்புகிறான். அபானனைக் கீழே இறங்கச் செய்கிறான். (உடலின்) மத்தி யில் குறிகிய வடிவில் வீற்றிருக்கும் அவனை எல்லா தேவர் களும் வழிபடுகிறார்கள்.. 5.7.) உடல் படைத்தோரில் சிலர்

வேறு உடல்களை வேண்டி யோனித் துவாரத்தை யடை கின்றனர். சிலர் தாவர நிலையை யடைகின்றனர். அவரவர் கருமத்துக்கும் ஞானத்துக்கும் தக்கவாறு (ஸத்வ ரஜஸ்தமஸ் மேல் இடை கடைநிலை 5.9.) எங்ஙனம் ஒரே நெருப்பு 5.10) (ஒரே வாயு) உலகப் பொருள்களில் புகுந்து அந்தந்தப் பொருள்களின் உருவத்துக்குத் தக்கவாறு தனித்தனி உருவுடை யதாக ஆயிற்றோ அங்ஙனமே உண்டான உயிர்களனைத்துக் கும் ஒன்றேயாகிய அந்த ஆத்மா அந்தந்த உருவங்களுக்குத் தக்க உருவுடையதாக ஆகி அவைகட்கப்பாலும் உள்ளதாக ஆயிற்று. (நீ உள்ளன்புடன் விரும்பும்படியே புலப்படுவான்) 5.11.) உலகுக் கெல்லாங் கண்ணாகவுள்ள சூரியன் கண்ணின் வெளிக் குற்றங்களால் எங்ஙனம் பற்றப்படுவதில்லையோ அங்ஙனமே உண்டாகிய உயிர்களனைத்திற்கும் ஒன்றேயாகிய அத்தராத்மா உலகத் துன்பங்களால் பற்றப்படாமல் அவை கட்கு அப்பால் உள்ளது. 5.12.) உண்டாய பொருள் அனைத் திற்கும் அந்தராத்மாவும் ஆண்டவனுமாகிய எந்த ஒருவன் ஒன்றேயாகிய தன் வடிவைப் பலவாகச் செய்கிறானோ அவனை எந்த தீரர்கள் தங்களிடம் உறைபவனாய்க் காண் கிறார்களோ அவர்களுக்கே அழிவிலாச் சுகம் உண்டு பிறர்க் கில்லை. 5.14.) அது எனப்படும் உத்தமமான ஆன்மசுகம் சுட்டிக்காட்ட வொண்ணாதாயினும் (பிரத்யக்ஷமாய் விளங்கும்) இதுவே என்று கருதுகின்றனர். அதுதானே ஒளிருஞ் சுடர் போன்றதா அல்லது பிற வொளியால் பிரகாசிக்கும் பொருள் போன்றதா? அதை எங்ஙனம் புத்தியால் அறிவோம்? 5.15.) அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை. சந்திரனும் நக்ஷத்திரங் களும் பிரகாசிப்பதில்லை. மின்னல் கொடிகளும் பிரகாசிப்ப தில்லை. இந்த அக்கினி எங்ஙனம் பிரகாசிப்பான்? ஸ்வயம் பிரகாசமுள்ள அவனைப் பின் பற்றியே அனைத்தும் பிரகாசிக் கிறது அவனொளியாலேயே இவையனைத்தும் விளங்குகிறது.

6.3.) நீக்கமற உலகு முழுவதும் பிராணவடிவான பிரமத்தினின்று தோன்றி அதனிடம் பயத்தினாலேயே தீ எரிகிறது, சூரியன் காய்கிறான், இந்திரன் மழை பொழிவதும், காற்று வீசுவதும், ஐந்தாவதாக யமன் உயிர்களின் மேல் பாய்வதும். இவையாவும் அதனிடம் பயத்தினாலேயே. 6.5.) அவரவர் உள்ளத்தில் கண்ணாடியில் போலும், பிதிருக்கள் உலகத்தில் கனவில் போன்றும், கந்தர்வ லுலகத்தில் நீர் நிலையில் காணப்படுவது போலும், பிரம்மலோகத்தில் வெயிலும் நிழலும் போலும் ஆன்மா அறியப்படுகிறது. (கண்ணாடியில் முகத்தை தெளிவாய்ப் பார்பது போல் மானிட வுலகத்திலேயே

ஆத்ம தரிசனம் தெளிவாய்ப் பெறக்கூடியது, மற்ற உலகங்களில் எளிதல்ல. ஒரு யோகி பகவான் எங்கே இருக்கிறார் என்று தேவர்களைக் கேட்க பகவான் பூலோகத்தில் வசிப்பதாக அல்லவா நாங்கள் அறிகிறோம். நீங்கள் இங்கே வந்து தேடுகிறீர்களே என்றனர். 6.6) ஒன்றுக் கொன்று தொடர்பில்லாமல் தனித்தனியே தோன்றும் இந்திரியங்களின் ஆத்மாவினின்று வேறான தனித்தன்மையும் அவை விழித்திருக்கும் போது உண்டாகி தூங்கும்போது மறையும் தன்மை எதுவோ அதையும் சிந்தித்து உணர்ந்து புத்திமான் துன்புறான். 6.9.) இதனுடைய ரூபம் கண்முன்னால் நிற்காது எவனும் கண்ணால் காண்பதில்லை. நிச்சயமான புத்தியாலும் மனதாலுமே இது அடையத்தக்கது. அறிந்தவர் சாகா நிலை அடைகின்றனர். (துவிஜர்கள் பரமாத்மாவை அக்கினியில் பூஜிக்கின்றனர். யோகிகள் தங்கள் இருதயத்தில் பூஜிக்கின்றனர். அறிவின் முதிர்ச்சி அடையாதவர்கள் பிம்பங்களில் பூஜிக்கின்றனர். ஸமதர்சிகள் எங்கும் பூஜிக்கின்றனர்) 6.10.) எப்போது ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனதுடன் அசையாது நிற்கின்றனவோ புத்தியும் தொழிலற்றுப் போகிறதோ அதை உயர்ந்த நிலை என்பர். 6.11.) இந்திரியங்கள் அசைவற்றடங்கிய அந்நிலையே (ஸ்திரமான இந்திரிய தாரணையே) யோகம் என்று கருதப்படும். அப்போது (அந்நிலை யடைந்தவன்) இந்திரியங்களின் வசமாகி மயங்காமல் ஜாக்கிரதையாக இருக்கிறான், (இருத்தல் வேண்டும்) யோகமானது தோன்றி மறையும் இயல்புடையதாதலின். 6.14.) எப்போது இவனுடைய இருதயத்தில் பொதிந்துள்ள ஆசைகள் எல்லாம் ஒழிகின்றனவோ அப்போது சாகும் இயல்புடைய மனிதன் சாகாதவனாகிறான். பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான். (பந்தங்கள் நிவிருத்தி) 6.15.) எப்போது இருதயத்திலுள்ள முடுச்சுகள் (அவித்தையாலும் அஹங்காரத்தாலும் எற்படும் சிக்கல்கள்) எல்லாம் இங்கேயே அவிழ்ந்து போகின்றனவோ அப்போதே சாகும் இயல்புடைய மனிதன் சாகாதவனாகிறான் இதுவே உபதேசத்தின் முடிவு. 6.16.) இருதயத்தின் நாடிகள் நூற்றொன்று, அவற்றுள் ஒன்று தலையின் உச்சி நோக்கிப் பாயும். அதன் வழிமேலே சென்று ஜீவன் சாகா நிலை எய்துகிறான், மற்ற நாடிகளெல்லாம் மரணத்திற்கே காரணம் 6.18.) இவ்வாறு யமனால் உபதேசிக்கப்பட்ட இந்த வித்தையையும் யோக விதிகள் அனைத்தையும் பெற்று நசிகேதஸ் பிரம்மத்தையடைந்து எல்லா மலங்களும் நீக்கினவனாகவும் சாவைத் தாண்டினவனாகவும் ஆனான். வேறு எவனாயினும் இவ்வாறு அத்தியாத்ம தத்துவத்தை அறிவானேல் அவனும்

அவ்வாறே பிரம்மத்தையடைந்து எல்லா மலங்களும் நீங்கி னவனாகவும் சாவைத் தாண்டினவனாகவும் ஆவான் (எதைப் பற்றிய கேள்வி கூடப் பலருக்குக் கிட்டுவதில்லையோ, கேட்டிருந்தாலும் எதைப் பலரும் அறிய வில்லையோ அதைப் பற்றிக் கூறுகிறவன் அறிது. அதை அடையும் நிபுணனும் அரிது. தினசரி வாழ்க்கைக்கு சட்ட திட்டங்கள் விதிப்பதில் உபநிஷத்தங்களுக்கு நோக்கமில்லை. அந்த வேலையை ஸ்மிருதிகள் செய்கின்றன. உபநிஷத் உலகத்தில் புகும் போதே கருமத்தளைகள் தாமாகவே தளர்கின்றன. பூர்ண சுதந்திரம் உடலுக்கு மனதுக்கு ஆன்மாவுக்கு இதுவே மூல மந்திரம். காண்பதற்கரியதும் அனைத்திலும் ஊடுருவி உள்ளுறையும் மறை பொருளும் ஆகிய அந்த ஆத்மாவை அத்தியாத்ம யோகத்தால் உணர்ந்து தீரனானவன் இன்ப துன்ப கிளர்ச்சி களிலிருந்து விடுபடுகிறான். இவ்வுண்மையை தெளிவுறக் கண்டவன் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை. இந்த ஆத்மா சரீரம் அழியும் போதும் அழியாமல் நிற்பது.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:- அத்யாத்மம், அதிபூதம், அதிதைவம் என நம்மிடையே தோன்றுவனவும், சூழ்நிலையில் தோன்றுவனவும், தெய்வத்தால் நிகழ்வனவும் ஆகிய மூவகைத் துன்பங்களும் அறவே ஒழிந்து, முக்காலத்திலும் சென்ற காலம், நிகழ் காலம், எதிர் காலங்களிலும், அமைதியும் இன்பமும் நில்வுக.



ஓம் பூர்ணமத: பூர்ணமிதம்: பூர்ணாத் பூர்ணமுதச்யதே பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவா வஸிஷ்யதே. ஓம்சாந்தி: சாந்தி: சாந்தி: (ஈசாவாஸ்ய-பிருஹதாரணீய சாந்தி பாடம்)

X—X—X—X—X

ஸொஅஹமஸ்மி' (ஈசாவாஸ்ய. 16.)

நான் அதுவாக இருக்கிறேன்.

X—X—X—X—X

ஸஹநாவ வவது! ஸஹநௌ புனக்து! ஸஹவீர்யம் கரவாவஹை! தேஜஸ்விநாவதீத மஸ்து! மா வித்விஷாவஹை! ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: (கடோபநிஷத் சாந்தி பாடம்)

X—X—X—X—X

உப—சமீபத்தில் சென்று; நி—நிச்சயமாக; ஸத்—துன்பத்தைக் களைகிறது : பேரின்பத்தைக் கூட்டுவிக்கிறது—உபநிஷத்.

**சாந்தி பாடம்:- ஓம் தேவர்களே! காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும். பூஜைக்குரியவர்களே! கண்களால் நாங்கள் நல்லதைக் காணவேண்டும். திடமான உறுப்புகளுடனும் உடல்களுடனும் (தேவர்களை) துதித்துப் போற்றிக் கொண்டு தேவர்களுக்குவப்பான ஆயுள் எவ்வளவோ அதை அடைவோமாக. பெரும் புகழ் வாய்ந்த இந்திரன், எல்லாவற்றையும் அறியும் சூரியன், தடைபடாத கதியுடைய கருடன், பிருஹஸ்பதி நமக்கு நன்மை அளிக்கட்டும்.**

1.1.) அவர்கள் பிரம்ம நாட்டமுடையவர்களாகவும் பிரம்ம நிஷ்டையுடையவர்களாகவும் பிரம்மத்தைத் தேடுபவர்களாகவும் இருந்தனர். அதைப்பற்றிய அனைத்தையும் இவர் உபதேசிப்பார் என்று ஸமித்தைக் கையுறையாகக் கொண்டு பிப்பிலாதரை அவர்கள் அணுகினர். (சிஷ்யர்களுடைய மனம் ஸமித்தைப் போல் வைராக்கியமடைந்திருக்கிற தென்பதற்கும் குருவின் உபதேசத்தை விரைவில் பற்றிக் கொள்ளும் என்பதற்கும் சிஷ்யன் தன்னை குருவிடம் முழுவதும் அர்ப்பணம் செய்கிறான் என்பதற்கும் இது அறிகுறி. பணிவாலும் பரிவு மிகுந்த கேள்வியாலும் சேவையாலும் அதை அறிக. எவன் ஊர்த்துவ ரேதஸ் ஆகின்றானோ அவன் தெய்வம் மனிதனன்று.) 1.3.) ஐயனே! இந்தப் பிரஜைகள் எங்ஙனம் உற்பத்தியாயினர்? 1.4.) பிரஜாபதி தவஞ் செய்து ரயு, பிராணன் என்ற இரட்டையைச் சிருஷ்டித்து, இவை எனக்குப் பலவகையான பிரஜைகளை உண்டாக்கும் என்று கருதினார். (ஸமஷ்டியான ஒவ்வொன்றும் பிரஜாபதி) 1.5. ப்ராணனே சூரியன். ரயியே சந்திரன். ஸ்தூல வடிவம் சூக்ஷம வடிவமுள்ள இது எல்லாம் ரயியே ஆகையால் உருவே ரயி என்பாம். 1.6.) சூரியன் உதிக்கையில் எல்லாத் திசைகளிலும் புகுந்து அனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும் போது அதனால் எல்லாப் பிராணன்களையும் ஒன்றாக்கிக் கொள்கிறான். 1.7.) அனைத்திற்கும் ஆத்மாவாகிய அவனே இவன். எல்லா வடிவமாகவும் பிராணனாகவும் அக்னியாகவும் உதிக்கிறான். ருக் மந்திரப்படி. 1.8.) விச்வரூபியாகவும், கிரணங்களுடன் கூடியவனாகவும், அனைத்தையும் அறிபவனாகவும், புகலிடமாகவும், இரண்டற்ற ஒளியாகவும், எரிப்பவனாகவும், ஆயிரங் கிரணங்களுடையவனாகவும் நூற்றுக் கணக்கான வடிவங் கொண்டு பிரஜைகளின் பிராணனாகவும் இந்த சூரியன் உதிக்கிறான். 1.9.) (கால வடிவான) வருஷமே பிரஜாபதி. எந்த ரிஷிகள் பிரஜைகளை விரும்பியவர்களோ அவர்கள்

தக்ஷிண மார்க்கத்தை யடைகிறார்கள் பித்ருயாயனம் என்னும் இது ரயியேயாகும். (அக்னிஹோத்ரம் அதிதி பூஜை) 1.10) ஆனால் தவத்தாலும், பிரம்மச்ரியத்தாலும், சிரத்தை யாலும், வித்தையாலும் ஆன்மாவை நாடியவர்கள் உத்தர மார்க்கத்தால் சூரியலோகத்தை யடைகின்றனர். இதுவே எல்லாப் பிராணன்களின் உறைவிடமும், மரணமும் பயமும் நீங்கிய இடமும் ஆகும். இதுவே உன்னதமான நிலை. இதினின்று மீண்டுந் திரும்புவதில்லை. இது (மற்றவர்களுக்கு தடை. (இது தேவயானம் எனப்படும் கிரம முக்தி மார்க்கம்) 1.12) மாதமே பிரஜாபதி. அதற்குக் கிருஷ்ணபக்ஷம் ரயி. சுக்லபக்ஷம் பிராணன். அதனால் ரிஷிகள் அனைத்தையும் ஒளி பிராணனாக பார்க்கிறார்கள். 1.13.) இரவு பகல் (நாள்) பிரஜாபதி. அதற்குப் பகலே பிராணன், இரவே ரயி. எவர்கள் பகலில் ரதியுடன் (ஸ்திரீஸப் போகம்) கூடுகிறார்களோ அவர்கள் பிராணனை சிதறடிக்கிறார்கள்; இரவில் கூடுவது பிரம்மச்ரியமே. 1.14) அன்னமே ப்ரஜாபதி. அதிலிருந்தே ரேதஸ் (உண்டாகிறது) அந்த ரேதஸ்ஸிலிருந்து இப் பிரஜை கள் உற்பத்தியாகின்றன. 1.16.) எவர்களிடம் சூதும் பொய்யும் வஞ்சனையும் இல்லையோ அவர்களுக்கேயாம் இந்த குற்ற மற்றப் பிரம்மலோகம்.

2.1.) ஐயனே! எத்தனை தேவதைகள் பிரஜைகளை ஆதரிக்கிறார்கள்? எத்தனை உடலை உயிர்ப்பிக்கின்றனர்? இவர்களுக்குள் சிறந்த தேவதை எது? 2.2.) இது ஆகாசம் என்ற தேவதையும், வாயுவும், அக்னியும், அப்புவும், பிருதி வியும், வாக்கு, மனம், கண், காது முதலியவைகளுமேயாம். அவை தம் சக்திகளை வெளிபடுத்திக் கொண்டு நாங்கள் தான் இவ்வுடலை ஆதரித்துத் தாங்குகிறோம் என்று கூறின. (ஒவ்வொரு சக்தியும் ஒரு தேவதை எனப்படும்) 2.3.) முக்கியப் பிராணன் அவைகளை நோக்கி மயக்கத்தை யடையாதீர்கள் நானே என்னை ஐந்து பாகமாக (பிராணன், அபானன். வியானன், உதானன், ஸமானன்)ப் பிரித்துக் கொண்டு ஆதரித்துத் தாங்குகிறேன் என்றது. 2.4) அம் முக்கியப் பிராணன் தன் பெருமையை விளக்குவதற்காக (உடலை விட்டு) கிளம்பவே மற்ற எல்லாம் கிளம்பளாயின. அது நிலை பெற்றதும் எல்லாம் நிலை பெற்றன—தேனீக்களைப் போல். ஆகவே வாக்கும், மனமும், கண்ணும், காதும் பிரதியுடன் பிராணனை துதிக்கலாயின. 2.5. முக்கியப் பிராணனே அக்கினி யாக எரிகிறது. இதுவே சூரியன். இதுவே மேகம். இதுவே இந்திரன். இதுவே காற்று. இந்த தேவதையே பிருதிவி, ரயி;

உள்தென்பதும் இலதென்பதும், அழிவற்ற பரம் பொருளும். 2.6.) சக்கரத்தின் குடத்தில் ஆரங்களைப் போல் பிராணனிடத்தில் எல்லாம் பொருத்தப்பட்டுள்ளன. 2.7.) பிரஜாபதியாக நீயே கர்ப்பத்தில் சலிக்கிறாய் (நீயே தாய் தந்தை வடிவில்) பிறகு பிறக்கிறாய். பிராணன்களே எல்லா உடல்களிலும் வீற்றிருக்கும் உனக்கு இப்பிரஜைகள் காணிக்கையைக் கொண்டு வருகிறார்கள். 2.8.) தேவர்களுக்கு எடுத்துச் செல்பவர்களுள் சிறந்தவனாகிறாய். பிதிருக்களுக்கு முதன்மையான அன்னமாயும் அதைக் கொண்டு சேர்ப்பவனுமாகிறாய். அங்கங்களின் ஸாரமான (கண் முதலிய) இந்திரியங்களின் இயக்கத்திற்கு அடிப்படையாயுள்ள உண்மைப் பிராண சக்தி நீயே. 2.9.) பிராணனே நீயே இந்திரன் வீரியத்தால் ருத்திரனாகவும் இருக்கிறாய் பரிபாலிப்பவனும் நீயே நீயே சூரியனாக வானத்தில் சஞ்சரிக்கிறாய். நீயே ஒளிகளின் அரசு. 2.10) பிராணனே! எப்போதும் நீ மழை பெய்கிறாயோ அப்போது தான் உன்னுடைய இப்பிரஜைகள் விருப்பப்படி அன்னம் உண்டாகப் போகிறதென்று ஆனந்த வடிவினராய் நிற்கின்றனர். 2 11.) பிராணனே! நீ விராத்தியன். ரக ரிஷி எனும் அக்னி (நீயே) (எல்லா ஹவிஸ்ஸையும்) உண்பவன். ஸத்தாயுள்ள உலகின் தலைவன்; உண்ணும் உனக்கு நாங்கள் (ஹவிஸ்ஸை) அளிப்பவர்கள். வாயுக்கு பிதா. 2.12.) உன்னுடைய எந்த வடிவம் வாக்கில் நிலை பெற்றுள்ளதோ, எது காதில், எது கண்ணில், எது மனதில் (ஸங்கல்ப வடிவில்) தொடர்ந்துறைகிறதோ அதை மங்களமாகச் செய் (அமங்களமாக்கி) கிளம்பி விடாதே. 2.13.) இதுவும், தேவலோகத்தில் இருக்கிறது எதுவோ அதுவும் எல்லாம் பிராணனாகிய உன்னுடைய வசமே. தன் மக்களைக் காக்கும் தாயைப் போல் எங்களைக் காத்தருள்வாய்; எங்களுக்கு நற்செல்வத்தையும் நல்லுறவையும் தந்தருள்.

3.1.) ஐயனே! இந்தப் பிராணன் எங்ஙனம் உண்டாகிறது? இவ்வுடலினுள் எங்ஙனம் வருகிறது? தன்னை வியாபகம் செய்து கொண்டு எங்ஙனம் நிலை பெறுகிறது? எதனால் வெளிக் கிளம்புகிறது? (அதிபூத அதிதைவ) வெளி உலகை எங்ஙனம் தாக்குகிறது? (உள் உலக) அத்யாத்மத்தை எங்ஙனம் தாக்குகிறது? 3 3.) இந்தப் பிராணன் ஆத்மாவினிடத்திலிருந்தே உண்டாகிறது. எங்ஙனம் இப்புருஷனிடம் நிழலோ அங்ஙனம் பரவி நிற்கின்றது. இந்த ஆத்மாவினிடம் இது (பிராணன்) பரவி நிற்கின்றது. மனத்தின் செய்கையால் இவ்வுடலினுள் வருகிறது. 3.4.) முக்கியப் பிராணன் மற்றப்

பிராணன்களை தனித்தனியே ஏவுகின்றது. 3.5.) பாயுவிலும் (மலத்துவாரம்) உபஸ்தத்திலும் (கருத்துவாரம்) அபானனை (பிராணன் நிறுத்துகிறது); கண்ணிலுங் காதிலும் வாயிலும் மூக்கிலும் பிராணன் தானே நிலைபெறுகிறது; இடையில் நாபிப் பிரதேசத்தில் உள்ளது ஸமானன்; (ஜாடராக்னியில்) ஹோமம் செய்யப்பட்ட உணவை (அங்கங்களில்) சமமாகக் கொண்டு செல்லுவது. அதினின்றே இவ்வேழு தீக்கொழுந்துகளும் எழுகின்றன. (கண் 2 காது 2 நாசி 2 வாய் 1). 3.6.) இந்த ஜீவாத்மா இருதயத்தில் (உறைகிறான்). இங்கு நூற்றோரு நாடிகள் உள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றும் நூறு நூறாகப் பிரிந்து, ஒவ்வொரு கிளை நாடியும் மீண்டும் 72,000 வேறு கண்ணி நாடிகளாகவும் பிரிகின்றன. இவைகளில் வியானன் செல்லுகிறது. 3.7.) இவற்றுள் ஒன்றின் வழியாக மேல்நோக்கிச் செல்லும் உதானன் புண்ணியத்தால் புண்ணிய உலகத்திற்கு அழைத்துச் செல்லுகிறது. பாவத்தால் பாவ உலகத்திற்கும் இரண்டாலும் மனித உலகத்திற்கும் அழைத்துச் செல்லுகிறது. 3.8.) சூரியனே வெளியிலுள்ள பிராணன்; இது கண்ணிலுள்ள பிராணனை இயக்குவித்துக் கொண்டு உதிக்கிறது. பிருதிவியில் உள்ள தேவதை எதுவோ அதுவே சரீரத்தில் உறைபவனின் அபானனைப் பற்றி இயக்குவிப்பது. (சூரியனுக்கும் பூமிக்கும்) இடையிலுள்ள வெளியே ஸமானன் (சரீரத்தில் ஸமானனை இயக்குவிப்பது). (வெளியிலுள்ள) காற்றே வியானன் (சரீரத்தில் வியானனை இயக்குவிப்பது) (ஸமஷ்டி வடிவமான உலகத்திலுள்ள பிராணனுக்கும் வியஷ்டி வடிவான உடலிலுள்ள பிராணனுக்கும் உறவு காணப்படுகிறது.) 3.9.) (வெளியிலுள்ள) ஒளியே உதானன் (சரீரத்தில் உதானனை இயக்குவிப்பது) ஆகையால் (உதானன் வடிவான) ஒளி மங்கியவர்கள் (இறந்தவர்கள்) மனதில் ஒடுங்கிய இந்திரிய சக்திகளைக் கொண்டு மறுபிறப்பை (அடைகிறார்கள்) (ஜீவனுக்கு ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என உடல் மூன்று மரணத்தில் ஸ்தூல சரீரத்தை மட்டும் விட்டு காற்றில் வாசனைகளைப் போல ஸூக்ஷ்ம காரண சரீரங்களை கவர்கிறான்.) 3.10.) (மரண காலத்தில்) இவன் என்ன எண்ணம் உடையவனோ அத்துடன் முக்கியப் பிராணனிடம் லயமடைகிறான். உதானனுடன் கூடிய பிராணன் ஜீவனுடன் (கிளம்பி) ஸங்கல்பிக்கப்பட்ட உலகுக்கு அழைத்துச் செல்கிறது, 3.12) பிராணனுடைய உத்பத்தியையும், வரவையும், இருப்பிடத்தையும், ஆட்சியையும் ஐந்து பிரிவையும் அத்தியாத்ம நிலையையும் அறிந்து (ஒருவன்) சாகாநிலை யெய்துவான், அறிந்து சாகாநிலை யெய்துவான்.

4.1.) ஐயனே! இந்தப் புருஷனிடத்தில் எவை தூங்கு கின்றன? எவை இவனிடம் விழித்திருக்கின்றன? இவற்றுள் எந்த தெய்வம் ஸ்வப்னங்களைக் காண்பது? இன்பம் எவருடையது? எதனிடம் நிலை பெற்று நிற்கின்றன? 4.2.) அஸ்தமிக்கும் சூரியனுடைய கிரணங்கள் எங்ஙனம் ஒன்று சேர்ந்து சூரிய மண்டலத்தில் ஒடுங்குகின்றனவோ, மறுபடி உதிக்கும் போது சூரியனுடைய கிரணங்கள் எங்ஙனம் வெளிப்பரவு கின்றனவோ அங்ஙனம் (ஸ்வப்னத்தில் இந்திரியங்கள்) எல்லாம் மனதாகிற பரதேவதையினிடம் ஒடுங்குகின்றன. அதனால் அப்போது இந்தப் புருஷன் கேட்பதில்லை, பார்ப்பதில்லை, முகர்வதில்லை, ருசிப்பதில்லை, பேசுவதில்லை, ஏற்பதில்லை, மகிழ்வதில்லை, விடுவதில்லை, நடப்பதில்லை; அவன் தூங்குகிறான் என்பர். 4.3.) இந்த (சரீரமாகிற) புரத்தில் பிராணாக்கினிகளே விழித்திருக்கின்றன; அபானன் (யஜமானுக்கு பின் பாகத்தில் எப்போதுமிருப்பதால்) கார்ஹபத்யாக்கினி; வியானனே (யஜமானுக்குத் தென்புறம் வலது பக்கத்தில்: இதில் பிதிருக்களும் க்ஷுத்ர தேவதைகளும் ஆராதித்தல் இருதயத்தில் வலது பக்க நாடியில்) தக்ஷினாக்னி; பிராணனே ஆஹவனீயாக்கினி. (யஜமானனுக்கு முன் இதில் தேவர்கள் ஆராதித்தல்) அபான அக்கினியிலிருந்து எடுக்கப் படுவதால். 4.4.) (பிராணனை அபானனில் ஹோமம் செய்யும்) உள்ளே செல்லும் மூச்சு (அபானனைப் பிராணனில் ஹோமம் செய்யும்) வெளிச் செல்லும் மூச்சு இவ்விரு ஆஹுதிகளையும் ஸமமாய் நடத்துவிப்பதால் (அதை செய்யும் வாயு) ஸமானன் என்பபடும். மனமே இந்த (ஹோமம் செய்யும்) யஜமானன். இஷ்டமான பலனாயிருப்பது உதானன்; உதானனே இந்த (மனதாகிற) யஜமானனை நாள் தோறும் (ஸ்வர்க்கப்ராப்தி போன்ற ஸுஷுப்தி நிலையில்) பிரம்மத்தினிடம் சேர்ப்பிக்கிறான். 4.5.) இந்த (மனதாகிற) தேவன் ஸ்வப்பனத்தில் தன் பெருமையை அனுபவிக்கிறான். எது எது (ஏற்கெனவே ஜாக்கிரத்தில்) பார்க்கப்பட்டதோ அதையெல்லாம் (மீண்டும்) பாக்கிறான்; எது எது கேட்கப்பட்டதோ அதையெல்லாம் கேட்கிறான்; பல இடங்களிலும் பல திக்குகளிலும் எது எது அனுபவிக்கப்பட்டதோ அதையெல்லாம் மீண்டும் மீண்டும் அனுபவிக்கிறான். கண்டதும் காணாததும், கேட்டதும் கேளாததும், அனுபவித்ததும் அனுபவியாததும், உள்ளதும் இல்லாததும் ஆன அனைத்தும் (தானே) ஆகி அனைத்தையுங் காண்கிறான். 4.6.) (மனதாகிற தேவன்) அவன் எப்போது (சிந்தத்தின்) ஒளியால் ஆக்கிரமிக்கப்படுகிறானோ அப்போது

இந்த தேவன் ஸ்வப்னங்களைக் காண்பதில்லை. அப்போது சரீரத்தில் இதுவே (சுஷுப்தி நிலையே) சுகமாகிறது. 4.7.) சித்தம் அழகியவனே! பறவைகள் எவ்வாறு தாம் வசிக்கும் மரத்தைச் சாருகின்றனவோ, அவ்வாறே (சக்திகள்) எல்லாம் கூடஸ்தனான ஆத்மாவினிடம் அடங்குகின்றன. 4.8.) பஞ்ச பூதங்களும் அவற்றின் தன்மாத்திரைகளும், ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் அவற்றின் செயல்களும், அந்தக் கரணங்களும் அவற்றின் செயல்களும், தேஜசும் அதனால் விளக்கப்படுவதும் (எல்லாம் இவற்றிக்கு வேறாகவுள்ள ஆத்மாவிற்காகவே) 4.9.) இவனே (ஜீவாத்மாவே) மனோமய கோச விஞ்ஞானமய கோச இயக்கங்களை செய்பவனும் ஆகிய விஞ்ஞானாத்மாவும் (சரீரமாகியபுரத்தில் உறையும்) புருஷனும் இவன் அழிவில்லாத பரமாத்மாவிடம் நிலை பெறுகிறான். 4.10.) (அறியாமையின்) நிழலற்றதும், உடலற்றதும், குணங்களற்றதும், பரிசுத்தமானதும் அழிவற்றதுமான அப்பொருளை ஏவன் அறிகிறானோ அவன் அந்த அழியாப் பொருளையே அடைந்து அறிந்தவனாக எல்லாமாக ஆய்விடுகிறான். 4.11.) (புத்தி குகையில் உறையும்) விஜ்ஞானாத்மா பிரகாசமான சக்திகளுடனும் புலன்களுடனும் எதனிடம் நிலை பெறுகின்றானோ அவன் எல்லாம் அறிந்தவனும், எங்கும் நிறைந்தவனும் ஆகின்றான்.

5.1.) ஐயனே! மனிதர்களுள் எவனொருவன் ஆயுள் முடிய ஓங்காரத்தை உபாசிக்கிறானோ அவன் அதனால் எந்த உலகத்தை எய்துகிறான்? 5,2.) எது ஓங்காரம் எனப்படுகிறதோ அதுவே பரப்பிரம்மமும், அபரப்பிரம்மமும்; அதனால் அதையுணர்ந்தவன் அவ்வாற்றால் இரண்டில் ஒன்றை அடைகிறான். 5.3.) ஒரு மாத்திரையை தியானித்தாலும் அறிவு விளக்கம் பெற்று ருக்வேத மந்திர தேவதைகளால் அவன் விரைவில் பூவுலகை அடைகிறான். 5.4,) இரண்டு மாத்திரையால் யஜுர் வேத மந்திர தேவதைகளால் அவன் அந்தரீக்ஷ வுலகையடைகிறான். ஸோம லோகத்தில் பெருமையை அனுபவித்து திரும்பி வருகிறான். 5.5.) எவன் பரமபுருஷனை மூன்று மாத்திரைகளுடன் கூடிய ஓம் என்ற அக்ஷரத்தால் தியானிக்கிறானோ அவன் சூரிய ஒளியில் ஒன்று படுகிறான். (கிரம முக்தி). யாம்பு தன் சட்டையினின்று விடுபடுவது போன்று அவன் பாவத்தினின்று விடுபடுகிறான். ஸாமங்களால் அவன் பிரம்மலோகத்துக்கு அழைத்துச் செல்லப் படுகிறான். ஸமஷ்டிஜீவவடிவினனான இரணியகர்பனுக்கும் அப்பாலுள்ள பரமபுருஷனை உடல்களனைத்திலும் உறை

பவனைக் காண்கிறான். 5.6.) (ஓங்காரத்தின்) மூன்று மாத்திரைகளும் (தனித்தனியே) உபாசிக்கப் பட்டால் அவை அழியும் பலனைத் தருபவை. மூன்றும் சேர்த்து உபாசிக்கப் பட்டால் அவை அங்ஙனம் ஆகா. வெளி வியாபாரங்களிலும், உள் வியாபாரங்களிலும், இடை வியாபாரங்களிலும், அவை முறைப்படி பொருத்தப்பட்டால் ஞானியானவன் அசைவுறான்.

6.1.) ஐயனே! பதினாறு கலைகளுள்ள புருஷனை நீர் அறிவீரா? அதைப்பற்றி உம்மைக் கேட்கிறேன். அப்புருஷன் யார் என்று. 6.2.) பதினாறு கலைகள் உள்ள புருஷன் இங்கே இச்சரீரத்தினுள்ளேயே உள்ளவன். 6.4.) அப்புருஷன் (ஜீவாதாரமான) பிராணனை சிருஷ்டித்தார் பிராணனிலிருந்து சிரத்தையும், ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி, இந்திரியம், மனது, அன்னம் முதலியவற்றையும், அன்னத்திலிருந்து வீரியத்தையும், தவத்தையும், மந்திரங்களையும், கருமத்தையும், உலகங்களையும், நாமத்தையும், சிரிஷ்டித்தார். 6.5.) இந்நதிகள் ஸமுத்திரத்தையடைந்து அதனுள் மறைந்து நாமரூபங்களை இழந்து பின் ஸமுத்திர மென்றே சொல்லப் படுகின்றனவோ, அங்ஙனமே இங்கு பார்ப்பவனுடைய பதினாறு கலைகளும் புருஷனை யடைந்து நாமரூபங்களை இழந்து பின் புருஷன் என்றே சொல்லப்படுகின்றன. 6.6.) தேர்ச்சக்கரத்தின் குடத்தில் ஆரங்கள் போல் கலைகள் எவனிடம் நிலை பெறுகின்றனவோ அந்த அறிய வேண்டிய புருஷனை அறிவீர்களாக; அதனால் உங்களைச் சாவுதுன்புறுத்தாமல் இருக்கும். 6.7.) இப்பிரமத்தை நான் இவ்வாறே உணர்ந்தேன். இதற்குமேல் அறியவேண்டியது ஒன்றுமில்லை. 6.8 ) எங்களை அவித்தைக்கு அப்பாலுள்ள கரையில் ஏற்றி விட்டமையால் நீங்களே எங்கள் பிதா. பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம். ஓம் தேவர்களே? காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும். ஓம் மூவ்வகையிலும் சாந்தி நிலவுக.

X X X X X X

புண்யேன புண்யம் லோகம் நயதி, பாபேன பாபம்,
உபாப்யாமேவ மனுஷ்யலோகம் (ப்ரச். 3.7.)
ஸர்வம் பரே தேவே மனஸ்யேகீபவதி (ப்ரச். 4.2.)
ஸ ஏநம் யஜமானம் அஹரஹர்—ப்ரஹ்ம கமயதி. (ப்ரச். 4.4.)
பரஞ்சாபரஞ்ச ப்ரஹ்ம (ப்ரச். 5.2.)
ந கம்பதே ஜ்ஞ; (ப்ரச். 5.6.)
த்வம் ஹி ந: பிதா, யோ அஸ்மாக-மவித்யாயா: பரம் பாரம் தாரயஸீதி (ப்ரச். 6.8.)

# 5. முண்டகோபநிஷத்

சாந்தி பாடம்:- ஓம் தேவர்களே! பூஜைக்குரியவர்களே! நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும், காண வேண்டும், போற்ற வேண்டும். தேவர்களுக்குவப்பான ஆயுள் அடைவோமாக. இந்திரன், சூரியன், கருடன், பிருஹஸ்பதி நமக்கு நன்மை அளிக்கட்டும்.

1.1.1.) ஓம் உலகைப் படைத்தவரும் புவனத்தை இரக்ஷிப்பவருமாகிய பிரம்மா அதர்வருக்கு எல்லா வித்தைக்கும் ஆதாரமாகிய பிரம்ம வித்தையை உபதேசித்தார். 1.1.3.) ஐயனே! எதை உணர்ந்தால் இது எல்லாம் உணர்ந்ததாகும்? 1.1.4.) பரா என்றும் அபரா என்றும் உணரவேண்டிய வித்தைகள் இரண்டு உண்டு என்று வேதத்தையுணர்ந்தவர், (ஞானிகள்) கூறுவரன்றோ? 1.1.5.) அவற்றுள் 'அபரா' என்பது ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், ஜோதிசம், ஆனால் 'பரா' (மேல்) என்பது எதனால் மேலே சொல்லப் போகிற அக்ஷரம் என்னும் (ஆன்ம) பொருள் அடையப்படுமோ அது. 1.1.6.) எல்லாப் பொருட்களுக்கும் பிறப்பிடமாகிய அக்ஷரத்தை ஆராய்ந்தறிகிறார்கள். 1.1.7.) சிலந்திப் பூச்சி, செடிகொடிகள் உரோமம் போல் தன்னிடத்தேயிருந்து அக்ஷரத்தில் உலகம் உண்டாகிறது! 1.1.8.) தவத்தால் பிரம்மம் வளர்கிறது. அதினின்று அன்னம், பிராணன், மனது. பஞ்ச பூதங்களும், உலகங்களும், கர்மங்களும், பயனும் படிப்படியாய் உண்டாயின. 1.1.9.) எல்லாவற்றையும் அறிந்தவரும் அறிபவரும் தவச்சக்தியானவரிடமிருந்தே காரியப் பிரம்மமும் நாம ரூபங்களும் ஜடப் பொருள்களும் உண்டாகின்றன.

1.2.1.) ஸத்தியமே மூன்று வேதங்களிலும் கர்மங்களாக பலவாறாக விவரிக்கப்பட்டுள்ளன. ஸத்தியத்தை எப்போதும் அனுஷ்டிப்பதே புண்ணிய உலகுக்கு வழி. 1.2.3.) எவனுடைய அக்னிஹோத்ரம், தர்சம், பௌர்ணமாஸம், ஆக்ரயணம், அதிதி பூஜை, ஔபாஸனம் வைச்வதேவ பூஜை, சாஸ்திர விதி ஆகியவை இல்லாமல் செய்யப்படுபவை ஏழு பிறவி வரை புண்ணிய லோகங்களை அடைய முடியாமல் செய்து விடுகிறது. 1.2.6.) யஜமானனை அந்த ஆஹுதிகள் சூரியனுடைய கிரணங்களுடன் கூடி இந்த ஸ்வர்க்கலோகம் உங்களுடைய நற்செயலின் புண்ணியம் என்று அழைத்துச் செல்கின்றன. 1.2.7.) ஆனால் பதினெட்டு வகைப்பட்ட கர்மம் விரிவு பட்டதெனினும் தாழ்ந்தது; இதையே பெரும்

பேறாகக் களிக்கும் மூடர்கள் பிறப்பிறப்பை பலமுறை அடை கிறார்கள். 1.2.8.) குருடர்களால் வழி காட்டப்பட்ட குருடர் போல் சுற்றிச் சுற்றி வருகின்றனர். 1.2.9.) அவித்தையில் ஆழ்ந்தவர்கள் ஆசைவயப்பட்டமையால் மீண்டும் நழுவு கின்றனர். 1.2.10.) (சுருதிகளில் கூறின) இஷ்டம், (ஸ்மிருதி களில் கூறின) பூர்த்தம் எனும் கருமங்களே சிறந்தவை எனக் கருதும் முழு மூடர்கள் உயர்நலம் தரும் பரத்தை உணர்வ தில்லை. அவர்கள் ஸ்வர்கத்தை அனுபவித்த பின் மீண்டும் பிறக்கின்றனர். 1.2.11.) ஆனால் எவர்கள் இந்திரியங்கள் அடங்கிச் சாந்தி யெய்தியவர்களாய் அறிவு நிறைந்தவர்களாய் பிச்சையாய்க் கிடைத்ததைக் கொண்டு அரணியத்தில் தவத் திலும் சிரத்தையிலும் வாழ்கின்றார்களோ அவர்கள் அழுக்கு நீங்கிய மனத்தினராய்ச் சூர்ய மார்க்கத்திற் சென்று மரணமும் மாறுதலுமற்ற (ஸமஸ்டி) ஆத்ம புருஷனிருக்கும் பிரம்ம லோகத்தை அடைகின்றனர். 1.2.12.) பிராம்மணனானவன், செயலற்ற பரம்பொருள் ஒரு செயலாலும் அடைதற்குறிய தன்றெனக் கண்டு வைராக்கியத்தை யடைந்து ஸமித்தைக் கையுறையாய்க் கொண்டு வேதக் கேள்வியிற் சிறந்தவரும் பிரம்ம நிஷ்டருமான குருவையே தேடியடைய வேண்டும். 1.2.13.) அந்த ஞானகுரு எதனால் ஸத்தியமும் அக்ஷரமும் ஆன பரமபுருஷனை அவன் அறிவானோ அந்தப் பிரம்ம ஞானத்தை உள்ளபடி உணர்த்துவார். (குரு ஸத்தியத்தையே இடைவிடாது ஸ்மரிப்பவர்; அதற்கு விரோதமானதை விலக்கு பவர்; அதில் தானும் நிலை பெற்று பிறரையும் நிலை பெறும்படி செய்பவர்.)

2.1.2.) அப்பரமபுருஷன் ஒளி நிறைந்தவன், உரு வில்லாதவன், உள்ளும் புறம்பும் ஒருங்கே உள்ளவன், பிறவா தவன், பிராணனில்லாதவன், மனதில்லாதவன், பரிசுத்தன், மலான அக்ஷரப் பிரம்மத்துக்கும் மேலானவன் (வேறானவன்) 2.1.3.) இவனிடமிருந்தே பிராணன் உண்டாகிறது. மனமும் எல்லா இந்திரியங்களும், ஆகாசமும், வாயுவும், அக்கினியும், ஜலமும், அனைத்தையும் தாங்கும் பிருதிவியும் (இவனிட மிருந்தே) உண்டாகின்றன. 2.1 4.) எவனுக்கு அக்கினி தலையோ, சந்திர சூரியர்கள் கண்களோ, திக்குகள் காது களோ, பிரசித்தமான வேதங்கள் வாக்கோ, வாயு பிராணனோ, உலகனைத்தும் உள்ளமோ, எவனுடைய பாதங்களிடம் பூமி தோன்றிற்றோ அவனே உலகில் உண்டாய அனைத்துக்கும் அந்தராத்மா. 2.1.5.) (பரம) புருஷனிடமிருந்தே சூரியனை ஸமித்தாகக் கொண்ட அக்னி, அந்த மழை, அதிலிருந்து

செடிகொடிகள் புருஷன்ஸ்திரீயிடம் ரேதஸ்ஸைப் பொழிகிறான் பல பிரஜைகள் தோன்றுகின்றன. 2.1.8.) அவனிடமிருந்தே உண்டாயின ஏழு பிராணன்களும், ஏழு ஜ்வாலைகளும், ஏழு ஸமித்துக்களும், ஏழு ஹோமங்களும்; எவ்வேழாய் இருத யத்தின் குகையில் ஒடுங்கி நின்று எவ்வேழாய் விரிந்த பிராணன்கள் சஞ்சரிக்கும் ஏழு உலகங்களும். (இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரண்டு நாசித்துவாரம், ஒரு வாய் ஆக ஏழு அக்கினி). 2.1.10.) பரம புருஷனே இவ்வுல கனைத்தும்; தவமே கருமம்; பிரம்மமே சிறந்த அமிருதம். பிரம்மத்தை இருதயகுகையில் உள்ளதாக எவன் காண் கிறானோ அவன், சித்தம் அழகியவனே, அவித்தையாகிற சிக்கலை அவிழ்த்தவனாகிறான்,

2.2.1.) (இருதய குகையில்) நிலை பெற்றுள்ளதாய்ப் பிரசித்தி பெற்று (ஆங்கிருந்தே ஐம்புலன்களின் வழி பிர காசிக்கும்) பரஞ்சோதியே பரமபதம். அதனிடமே–சலனமும், பிராணனுடைய இயக்கமும், இமைத்தலும்–இது எல்லாம் ஸமர்ப்பிக்கப்பட்டுள்ளன. ஸத்தாகவும் அஸத்தாகவும் எல்லாப் பிரஜைகளுக்கும் போற்றி விரும்பத்தக்கதாகவும், அனுபவ அறிவுக்கும் அப்பாற் பட்டதாகவும் ஒப்புயர்வற்றதாகவும் உள்ளது எதுவோ அதை அறிவீர்களாக. 2.2.3.) சித்தம் அழகியவனே! உபநிஷத்திலுள்ள மஹா அஸ்திரமாகிய (ஓங் கார) வில்லை எடுத்து உபாசனையால் கூர்மை பெற்ற (உன் ஜீவனாகிய) அம்பைத் தொடுத்து பிரம்ம பாவனை நிறைந்த சித்தத்தால் அதை இழுத்து அந்த அக்ஷரப் பிரம்மமாகிய லக்ஷியத்தில் லயமடையச் செலுத்துவாய். (தான் முக்தி அடைய வேண்டும் என்ற ஆர்வம் நெஞ்சில் உதிக்க வேண்டும். இல்லை யாகில் ஈசுவரன், குரு, அடியார் இவர்கள் அருளும் இருந் தாலுங் கூட ஜீவன் நாசமடைவான்) 2.2.4.) பிரணவமே வில்; ஆத்மாவே அம்பு; பிரம்மமே அதன் குறி; கவனக்குறை வின்றி (குறி) எய்யப்பட வேண்டும். அம்பைப் போல் ஒன்று பட்ட நிலை ஏற்படும். 2.2.5.) பூவுலகும் அந்தரிக்ஷமும் ஸர்வப் பிராணன்களுடன் கூடிய மனமும் எவனிடம் (வஸ்தி ரத்தில் நூல்போலக்) கோக்கப்பட்டுள்ளதோ அந்த ஒருவனாகிய பரமாத்மாவையே அறிவீர்களாக மற்றவார்த்தைகளை விட் டொழிக. இதுவே மோக்ஷத்திற்குப் பாலம் (கரை) (சாவைக் கடந்து செல்வதற்கு வேறுவழியில்லை) 2.2.6.) (இருதயத்தில்) எங்கு நாடிகள் கூடுகின்றனவோ (அங்கு) அந்த பரமாத்மா (அந்தக்கரண உபாதியினால்) பல்விதமாய் மாறுபட்டுத் தோன்றிக் கொண்டு இருக்கிறது. அந்த ஆத்மாவை ஓம் என்று

இவ்வாறாக தியானம் செய்யுங்கள். 2.2.7 ) எல்லாவற்றையும் ஸாமான்யமாய் அறிபவரும், எல்லாவற்றையும் விசேஷமாய் அறிபவரும், இப்புவியில் காணப்பெறும் மகிமை எல்லாம் எவருடையதோ அந்தப் பரமாத்மா திவ்வியப் பிரம்மபுரமாகிய சிற்றம்பலத்தில் (இருதயாகாசத்தில்) எழுந்தருளியுள்ளார். 2.2.8.) அவர் மனோரூபியாகவும் சரீரத்தையும் பிராணனையும் நடந்துபவராயும் இருதயத்தில் நிலை பெற்று உடலில் உறைபவராகவும் விளங்குகிறார். ஆனந்த ரூபமாய் அழிவற்றதாய் எது பிரகாசிக்கின்றதோ அதை புத்திமான்கள் எங்கும் பூரணமாய்க் காண்கின்றனர். 2.2.9.) அந்தப் பராபரவஸ்து பார்க்கப்பட்டதும். இவனுடைய இருதய முடிச்சு அவிழ்கிறது. சந்தேகங்கள் எல்லாம் ஒழிகின்றன. கருமங்களெல்லாம் நாசமடைகின்றன. (அனேக ஜன்மன்களில் செய்த பாவம் போயொழியும். நாடீபந்தம், அபிமானம் எனக் கிரந்திகள் இரண்டாம். எல்லா நாடிகளினின்றும் திரும்பி ஒரே நாடியைச் சாருங்கால் ஆத்மவொளி கட்டுவிட்டு தனதியல்புறும். அப்போது கர்த்தா அவனலனாதலின் அவனுக்குங் கர்மங் கழன்றது. அதுவே உத்தம சக்தி நிலை சாந்தி நிலை) 2.2.10.) பொன் போன்று பிரகாசிக்கும் சிறந்த (புத்தி கோசத்தில் பிளவுபடாத பிரம்மம் சுத்தமாயும் ஒளிகளுக்கெல்லாம் ஒளியாயும் உளது. 2.2.11.) அங்கே சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல், அக்கினி இவை எதுவும் பிரகாசிப்பதில்லை. ஸ்வயம் பிரகாசமுள்ள ஆத்மாவைப் பின் பற்றியே அனைத்தும் அவனொளியாலேயே பிரகாசித்து விளங்குகின்றன. 2.2.12.) அழிவற்ற இந்த பிரம்மமே கிழக்கில், மேற்கில், தெற்கிலும் வடக்கிலும், கீழும் மேலும் நிறைந்திருக்கிறது.

3.1.1.) அழகிய சிறகுடைய பக்ஷிகள் இரண்டு இணை பிரியாதவை; ஸமான அந்தஸ்துடையவை; ஸமானமாக ஒரே விருக்ஷத்தை வாசஸ்தானமாயடைந்தவை. அவற்றுள் ஒன்று உருசியுள்ள பழத்தை உண்கிறது; மற்றதோவெனின் உண்ணாமல் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருக்கிறது. (பக்ஷிகள்—ஜீவனும் ஈசுவரனும்; பழத்தை—கர்மத்தாலுண்டாகும் இன்ப துன்பங்களை) 3.1.2.) ஸமான வாசஸ்தானமாக விருக்ஷத்தையுடையதாயினும் ஒரு பக்ஷி (ஜீவன்) தாழ்ந்த நிலையையடைந்து, மதிமயங்கித் திறமையற்றுச் சோகிக்கிறது. அது எப்போது ஏற்றமுள்ளதும் ஆளுந் திறமை வாய்ந்ததுமான மற்றதைப் பார்க்கிறதோ அப்போது அந்த மகிமை தன்னுடையதே என்று கண்டு சோகம் நீங்கியதாக ஆகிறது.

3.1.3) பரம புருஷனை எப்போது பார்க்குந் திறமையுடையவன் பார்க்கின்றானோ அப்போது அவ்வித்வான் புண்ணிய பாவங்களை உதறிவிட்டு மாசற்றவனாய்ப் பரம(புருஷனுடன்) ஸாம்யத்தை அடைகிறான். (கரிநெருப்பில் நெருப்பாவதுபோல்) 3.1.4) எந்தப் பிராணன் எல்லா உயிர்களிலும் காணப்படுகிறதோ அந்தப் (பிராணனுக்கும்) பிராணன் இவனே என்று அறிந்த வித்வான், ஆத்மாவினிடமே விளையாடுபவனாகவும், ஆனந்திப்பவனாகவும் உடையவன் பிரம்ம ஞானிகளிற் சிறந்தவன். 3.1.5) உடலுக்குள்ளேயே ஜோதிர்மயமாயப் பரிசுத்தமாய்விளங்கும் எந்த ஆத்மபொருளைச்சித்தமலம் நீங்கிய ஸந்நியாசிகள் காண்கின்றார்களோ, அந்த ஆத்மபொருள் அகண்டமான பிரமச்சரியத்தாலும் தெளிந்த ஞானத்தாலும் இடைவிடாத தவத்தாலும்(மனதும்இந்திரியங்களும்ஒருமுகம்) ஸத்தியத்தாலுமே அடையப்பெறும். 3.1.6) ஸத்தியமே ஜயிக்கும், பொய்யன்று. ஆசைகள் பூர்த்தி பெற்ற ரிஷிகள் ஸத்தியத்தின் எல்லை நிலமாகிய இடத்திற்கு (மோக்ஷத்திற்கு) எந்த மார்க்கத்தில் செல்லுகிறார்களோ, அந்த தேவையான மார்க்கம் ஸத்தியத்தாலேயே பரப்பப்பட்டுள்ளது. 3.1.8) எல்லாம் எதனிடம் கோக்கப்பட்டுள்ளதோ அந்த ஆத்மா சூட்சுமமானது சித்தத்தால் அறியக்கூடியது. பரிசுத்தமான உள்ளத்தில் அது தானாகவே பிரகாசிக்கும். (அழுக்கடைந்த கண்ணாடி, கலங்கின நீர் போல் இருந்தால் உணராது; உலகப்பற்று நீக்கம்) 3.1.9) ஞானத்தெளிவால் நிஷ்களமான பரிபூர்ணத்தைத் தியானத்தால் கான்கிறான். 3.1.10) தெளிந்த சித்தமுடையவன் எந்த எந்த உலகத்தை மனதால் ஸங்கல்பிக்கின்றானோ, எந்த எந்த போகங்களை விரும்புகின்றானோ அந்த அந்த உலகத்தையும் அந்த அந்த போகங்களையும் அடைகிறான். ஆகையால் பெரும்பேறு வேண்டுபவன் ஆத்மஞானியை பூஜிக்க வேண்டும்.

3.2.1) நிஷ்காமர்களாய், தீரர்களாய் உள்ளவர்கள் மீண்டும் பிறவிக்கு விதையாகிய சுக்கிலதைச் சாராமல் விடுபடுகின்றனர். 3.2.2) (ஆசைகளைஜயிக்காத) எவன் எந்த ஆசைகளைப் பற்றியே சிந்தித்து விரும்பி நிற்கின்றானோ அவன் (இறந்தபின்) அந்தந்த (ஆசைகளுக்குத்தக்க) இடங்களில்(அந்தந்த)ஆசைகளுடன் பிறக்கிறான். ஆசைகளின் பூர்த்தியடைந்து ஆத்மஸ்வரூபமாய் உள்ளவன் எவனோ அவனுடைய ஆசைகளெல்லாம் இங்கேயே (இந்த ஜன்மத்திலேயே) நசித்துப்போகின்றன. (மறுபிறப்புக்குக் காரணமாவதில்லை).

3.2.3) வேதங்களை கற்றதாலோ, நுண்ணறிவினாலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா அடையப்படுவதன்று; ஆத்மா ஒன்றையே பிரார்த்திக்கின்றானோ (அப்போது) அவனால் அடையப்படும்; அவனுக்கு அப்போது இந்த ஆத்மா தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தைப் பிரகாசப்படுத்துகின்றது. 3.2.4) இந்த ஆத்மா பலம் (மனோவன்மை) இல்லாதவனால் அடையமுடியாதது. 3.2.5) இந்த ஆத்மாவை அடைந்த ரிஷிகள் அந்த ஆத்ம ஞானத்திலேயே திருப்தியெய்தியவர்கள். ஆத்ம ஸ்வரூபமாக ஆய்விட்டவர்கள் பற்றுஒழிந்தவர்கள், பரம சாந்தர்கள். இந்திரியங்களையடக்கியவர்களும் தீரர்களுமாகிய அவர்கள் எங்கும் நிறைகின்ற பரம் பொருளை எங்குங் கண்டு (சரீரம் விழும்போது) எல்லாமாய் விளங்கும் அவ்வான்மப் பொருளில் இரண்டறக் கலக்கிறார்கள்.

**3.2.6)** வேதாந்த அனுபவஞானத்தின் பயனாகிய ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் திடநிச்சயம் எய்தியவர்கள் ஸந்நியாச யோகத்தால் பரிசுத்தமான சித்தம்படைத்த யதிகள். அவர்கள் எல்லோரும் பராமிருதமாகிய பிரம்மத்தில் நிலைபெற்று (ஜீவன் முக்தர்களாகவே) வாழ்ந்து அந்திய காலத்தில் (சரீரம் விழுந்தபின்) பற்றனைத்தினின்றும் அறவே விடுபடுகின்றனர். (பிரம்மத்தில் லயிக்கின்றனர்) 3.2.7) (மோக்ஷகாலத்தில்) பதினைந்து கலைகளும் தத்தம் மூலஸ்தானத்திற்குச் சென்றுவிடுகின்றனர்; இந்திரியங்கள் அனைத்தும் தம்தம் அதிஷ்டான தேவதைகளிடம் (சென்று விடுகின்றன); (பற்று நீங்கிய எல்லாக் கருமங்களும் விஜ்ஞான மயமான ஆத்மாவும் அழிவில்லா பரம்பொருளில் ஒன்றுபடுகின்றன. 3.2.8) பெருகியோடும் நதிகள் நாமரூபங்களையிழந்து ஸமுத்திரத்தில்மறைகின்றனவோ அங்ஙனம் ஞானி நாமரூபங்களினின்று விடுபட்டு உயர்ந்ததெற்கெல்லாம் உயர்ந்த தேஜோமயமான புருஷனை அடைகிறான். 3.2.9) எவன் அந்தப் பிரம்மத்தையறிகிறானோ அவன் குலத்தில் பிரம்ம ஞானமில்லாதவன் உண்டாகமாட்டான். அவன் சோகத்தை தாண்டுகிறான். இருதய முடிச்சுகளினின்று விடுபட்டு அமிருதத்துவத்தை (சாகாத்தன்மையை) அடைகிறான். 3.2.11) ஞானிகள் தங்களை நாடும் முமுக்ஷுக்களுக்கு பிரம்மத்தை உபதேசிக்க வேண்டும் என்பது கருத்து (பசித்து உண்ட உணவே நன்றாக ஜீர்ணமாவது போல்) இதை விரதமனுஷ்டிக்காதவன் அத்தியயனம் செய்யக் கூடாது.

ஓம் தேவர்களே நாங்கள் காதுகளால் நல்லதைக் கேட்கவேண்டும். கண்களால் நல்லதைக் காணவேண்டும். பூஜைக்குரியவர்களே! முவ்வகையிலும் சாந்தி நிலவுக.

சாந்தி பாடம்:- ஓம் தேவர்களே, பூஜைக்குரியவர்களே! நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும், காணவேண்டும், போற்ற வேண்டும், தேவர்களுக்குவப்பான ஆயுள் அடைவோமாக; இந்திரன், சூரியன், கருடன் ப்ருஹஸ்பதி நமக்கு நன்மை அளிக்கட்டும்.

1.) ஓம் என்ற இந்த அக்ஷரமே இது எல்லாம். (இனி) இதன் விளக்கம். சென்றது, நிகழ்வது, வரப்போவது என்ற எல்லாம் ஓங்காரமே. எது முக்காலத்துக்கும் அப்பாலுள்ளதோ அதுவும் ஓங்காரமே. 2.) இது எல்லாம் பிரம்மமே. இந்த ஆத்மாவும் பிரம்மமே. அப்படியுள்ள இவ்வாத்மா நான்கு பாதங்களுள்ளது. (வாச்யமாகிய சப்தமாகியபிரம்மமே எல்லாம்) 3. முதல் பாதம் ஸ்தூலத்தை யனுபவிக்கும் வைசுவாநரன்; ஏழு அங்கங்கள்; பத்தொன்பது முகங்கள், வெளிப்பிரஞ்ஞை; இருப்பிடம் ஜாக்கிரம். 4.) இரண்டாம் பாதம் (ஸூக்ஷ்ம வாசனைகளைத்) தனிமையில் அனுபவிக்கும் தைஜஸன்; ஏழு அங்கங்கள், பத்தொன்பது முகங்கள் உள் பிரஜ்ஞை; இருப்பிடம் ஸ்வப்னம் (ஸூக்ஷ்ம வாசனை) (ஸ்வர்க்கம் தலை, சந்திர சூரியர் கண்கள்; திசைகள் காதுகள், வாயு மூச்சுக் காற்று, வேதங்கள் வாக்கு, ஆகாயம் இருதயம், பூமி பாதம் ஆக 7 அங்கங்கள்; ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பிராணன் 5, அந்தக்கரணம் 4 ஆக 19 முகங்கள்; இவற்றின் வழி) 5.) மூன்றாம் பாதம் ஆனந்தத்தை யனுபவிக்கும் ப்ராஜ்ஞன்; சித்தம் (ஒன்றே) முகம்; ஒருவனாய் நிற்பவன். பிரஜ்ஞையே வடிவானவன்; இருப்பிடம் ஸுஷுப்தி. தூங்குவோன் எந்நிலையில் விருப்பம் எதையும் விரும்புவதில்லையோ கனவு எதையுங் காண்பதில்லையோ அது தான் ஸுஷுப்தி. 7.) நாலாவது பாதமாய்க் கருதப்படுபவன் உள் வெளி இடை பிரஜ்ஞை மூன்றும் இல்லாதவன். பிரஜ்ஞை வடிவானவனும் மன்று, சேதனுமன்று, அசேதனுமன்று, பார்க்க முடியாதவன், விவரிக்க முடியாதவன், கிரகிக்க முடியாதவன், அடையாளமில்லாதவன், நினைக்க முடியாதவன், குறிப்பிட முடியாதவன். ஒன்றே ஆத்மா என்ற அறிவால் அனுசரித்தறியத் தக்கவன் (பஞ்ச பூதங்களின் விரிவாகிய) பிரபஞ்சமற்றவன், சாந்தன், சிவன், இரண்டற்றவன். அவனையே துரியமாகக் கருதுகின்றனர். அவனே ஆத்மா. அவனே அறியத்தகுந்தவன். 8.) அந்த இவ்வாத்மா (ஒரு) அக்ஷரத்தால் (குறிக்கப்படும் போது) ஓங்காரம்; மாத்திரைகளே பாதங்கள்; ஆகாரம், உகாரம், மகாரம் என்னும் பாதங்களே மாத்திரைகள்,

12.) பிரபஞ்சம் லயிக்கும் நாலாவது (ஸ்தானம்) மாத்திரை இல்லாதது. இங்ஙனம் ஓங்காரம் ஆத்மாவே. எவனெவன் இங்ஙனம் அறிகிறானோ அவனவன் தன்னால் தானாகிய ஆத்மாவையடைகிறான்.

## மாண்டூக்கியோபநிஷத்காரிகை.

1.1.) விசுவன் வெளிப் பிரஜ்ஞையுடையவன் எங்கும் வியாபிப்பவன்; தைஜஸன் உள் பிரஜ்ஞையுடையவன்; அவ்வாறே பிராஜ்ஞன் உள் வெளியற்ற உருக்கொண்டவன். (இவ்விதம்) ஒருவனே மூன்று வடிவில் கூறப்படுகிறான். 1.5.) மூன்று நிலைகளிலும் எது போஜ்யமோ அதையும் எவன் போக்தாவோ அவனையும் எவன் அறிகிறானோ அவன் அனுபவிப்பவனாயினும் பற்றப்படுவதில்லை. 1.8.) சிருஷ்டி விஷயத்தில் சிலர் சிருஷ்டியானது ஈசுவரனுடைய இச்சை மாத்திரம் என்று நிச்சயித்திருக்கிறார்கள்; காலத்தை ஆராய்பவர்கள் காலத்திலிருந்து பொருள்களின் சிருஷ்டி ஏற்பட்டதாய் எண்ணுகிறார்கள். 1.11.) விசுவனும் தைஜஸனும் காரியகாரணத்தால் கட்டப்பட்டவர்கள். பிராஜ்ஞன் காரணத்தால் கட்டப்பட்டவன். இக்கட்டுகள் இரண்டும் துரியனிடத்தில் இல்லை. 1.14.) விசுவனும் தைஜஸனும் கனவுகளை ஒன்றை மற்றொன்றாகக் காணும் அஜ்ஞான நித்திரையுடன் கூடியவர்கள்; பிராஜ்ஞனோ கனவில்லாத அஜ்ஞான நித்திரையுடன் கூடியவன். துரிய நிலையில் திடநிச்சயமுள்ளவர்கள் நித்திரையையோ கனவையோ காண்பதில்லை. 1.16.) அனாதிமாயையால் தூங்கும் ஜீவன் எப்போது விழித்துக் கொள்கிறானோ அப்போது பிறப்பில்லாமலும் நித்திரை இல்லாமலும் ஸ்வப்னமில்லாமலும் இருக்கிற அத்வைத ஸ்வரூபமான துரியத்தை அறிகிறான். 1.22.) மூன்று அவஸ்தைகளிலும் எது ஒரே சமமாக உள்ளதோ அதை நிச்சயமாய் அறிபவன் பூஜிக்கத்தக்கவன், வந்தனத்துக்குரியவன், சிறந்த முனிவன். 1.25,) மனதைப் பிரணவத்தில் சேர்க்க வேண்டும். பிரணவம் பயமில்லாத பிரம்மஸ்வரூபம். பிரணவத்தை எப்போதும் தியானிப்பவனுக்கு எவ்விடத்திலும் பயமில்லை.

2.6 ) எது ஆதியிலும் முடிவிலும் இல்லையோ அது நடுவிலும் அப்படியே (இல்லை தான்) இன்மையால் சமானமாயிருப்பினும் (காண்பவை) உண்மைபோல் தோன்றுகின்றன 2.13.) ஒரு சர்வவல்லமை வாய்ந்த ஆத்மா உள்நோக்குடையவனாய் இருக்கையில் பாவனைகளைச் சிருஷ்டிப்பது போலவே வெளிநோக்குடையவனாயிருக்கையில் வெளியுள்ள யதார்த்தங்களையும் சிருஷ்டிக்கிறான். வேற்றுமை இந்திரிய

பேதத்தில் தான் இருக்கிறது. 2.16) (ஆத்மா) முதலில் ஜீவனைக்கற்பித்துப்பின் வெளியிலும் உள்ளும் உள்ள பலவிதமான பொருள்களைக் கற்பிக்கிறான். அறிவுக்குத் தகுந்த ஆசையும் ஆசைக்குத் தகுந்த அறிவும் மாறிமாறி வந்து கற்பனை பெருகுகிறது. 2.20) (உலகின் உற்பத்திக்குக் காரணம்) பிராணன் என்று பிராணனை அறிந்தவர்களும், பஞ்சபூதங்கள் என்று அவற்றை அறிந்தவர்களும், குணங்கள் என்று குணங்களை அறிந்தவர்களும், தத்துவங்கள் என்று தத்துவங்களை அறிந்தவர்களும் (கூறுகிறார்கள்). 2.26) தத்துவங்கள் இருபத்தைந்து என்று சிலரும்; இருபத்தாறு என்று சிலரும், முப்பத்தொன்று என்று சிலரும் அநேகம் என்று பிறரும் கூறுகிறார்கள். 2.29) (ஆசாரியர்) எக்கருத்தை எவனுக்குக் காண்பிக்கிறாரோ அக்கருத்தை அவன் பார்க்கிறான். அதுவே ஆத்மாவாயிருந்து அவனைக் காப்பாற்றுகிறது. அதுவே தத்துவம் என்ற அபிப்பிராயம் அவனிடம் நிலை பெறுகிறது. 2.31) எங்ஙனம் ஸ்வப்னமும் மாயையும் பார்க்கப்படுகின்றனவோ, எங்ஙனம் கந்தர்வ நகரம் பார்க்கப்படுகிறதோ அவ்வாறே இவ்வுலகெல்லாம் வேதாந்த நிபுணர்களால் பார்க்கப்படுகிறது. 2.32) பிரளயமும் இல்லை, உற்பத்தியும் இல்லை, கட்டுப்பட்டவனும் இல்லை, ஸாதகனும் இல்லை, முமுக்ஷுவும் இல்லை; விடுபட்டவனும் இல்லை என்பதுதான் பரமார்த்த ஸத்தியம். 2.35) பற்று, பயம், கோபம் இவைகளில்லாதவர்களும் வேதாந்தத்தை அறிந்தவர்களும் ஆகிய முனிவர்களால் நிர்விகல்பமாயும் துவைதபிரபஞ்சமற்றதாயும் அத்துவயமாயுமுள்ள ஆத்மா பார்க்கப்படுகிறது. 2.37) (தேவதைகளுக்கு) ஸ்தோத்ர நமஸ்காரமோ (பிதிருக்களுக்கு) ஸ்வதாகாரமோ செய்ய வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லாதவனாயும் சலமான சரீரமே வீடாகவும் அசலமான ஆத்மாவே இருப்பிடமாகவும் கொண்டு தற்செயலாய்க் கிடைத்ததில் திருப்தியடைந்தவனாகவும் யதியானவன் இருக்க வேண்டும்.

3.3.) பரமாத்மா மஹாகாசத்தைப் போல் என்று கூறப்பட்டுள்ளது; சரீரங்கள் குடங்களைப் போலும், ஜீவர்கள் குடத்திலுள்ள ஆகாசத்தைப் போலும் சிருஷ்டி விஷயத்தில் இதுவே தகுந்த திருஷ்டாந்தம். 3.4.) குடங்கள் உடைந்த போது குடங்களிலுள்ள ஆகாசம் மஹாகாசத்தில் கலந்துவிடுவதுபோல் இந்தப் பரமாத்மாவில் ஜீவன் லயமடைகிறான். 3.9.) இறப்பிலும் பிறப்பிலும் போதலிலும் வருதலிலும் இருத்தலிலும், எல்லாச் சரீரங்களிலும் ஆத்மாவுக்கும் ஆகாசத்திற்கும் வித்தியாசமில்லை. 3.18) அத்துவைதம் காரணமாகிய

பாரமார்த்திக ஸத்தியம்; துவைதம் அதன் காரணமாகிய வியாவஹாரிக ஸத்தியம் என்று சொல்லப்படும். துவைதி களுக்கு இரண்டிலும் துவைதம் என்ற நம்பிக்கை. அதனால் அத்வைதமாகிய இது விரோதப்படுவதில்லை 3.26. எதற்கும் பிடிபடாத காரணத்தால் ஆத்மாவை இது அல்ல இது அல்ல என்று அனைத்தையும் சுருதி தள்ளுகிறது. இதனால் பிரம்மமே பிரகாசிக்கிறது. 3.29.) மனது எப்படி ஸ்வப்பனத்தில் மாயை யால் இருவகையாய் மாறுகிறதோ அப்படியே ஜாக்கிரத்திலும் மனது மாயையால் இருவகையாய் மாறுகிறது. 3.31.) மன தால் காணப்படும் சராசரமாகிய துவைதப் பிரபஞ்சம் எது உண்டோ அந்த துவைதப் பிரபஞ்சம் மனதற்ற நிலையில் காணப்படுவதில்லை. (துரியம், ஸுஷுப்தி) 3.32.) அறிவின் விழிப்பினால் எப்போது மனது சங்கற்பிக்கவில்லையோ அப்போது உணரப்படும் வஸ்து இல்லாததால் உணரும் மனதும் இல்லாததாகிறது 3..37.) அது பேச்சற்றது, சிந்தனை களனைத்துக்கும் அப்பாற்பட்டது, சாந்தமானது, ஸ்வயம் பிரகாசமானது, ஸமாதியால் அறியத் தகுந்தது, செயலற்றது, பயமற்றது. 3.39.) இது (அஸ்பர்சயோகம்) பற்றின்மை எனும் யோகம்; சாதாரண யோகிகளால் அடைதற்குக் கடினமானது. பயமற்ற இதனிடத்தில் பயத்தைக் காணும் யோகிகள் இந்த யோகத்தினின்று பின் வாங்குகிறார்கள். 3.42.) காமத்திலும் போகத்திலும் சிதறிப்போன மனதை உபாயத்தால் அடக்க வேண்டும். காமம் எப்படியோ அப்படித் தான் நித்திரையும் (அனர்த்தத்திற்குக் காரணம்)

4.22.) எந்த வஸ்துவும் தன்னிடத்திலிருந்தோ பிரி தொரு இடத்திலிருந்தோ உண்டாவதில்லை. ஸத்தாயினும். அஸத் தாயினும், ஸதஸத்தாயினும், எவ்வஸ்துவும் உண்டாவ தில்லை 4.37.) ஜாக்கிரத்தில் போலவே ஸ்வப்னத்திலும் விஷயங்கள் கிரகிக்கப்படுங் காரணத்தால் ஜாக்கிரத்தால் ஸ்வப்னம் ஏற்படுகிறதென்று சொல்லப்படுகிறது. அக்காரணத் தால் (ஸ்வப்னத்தைக் காண்பவனுக்கே ஸ்வப்னம் உண்மை யாயிருப்பது போல்) அவனுக்கே ஜாக்கிரமும் உண்மையாய் இருப்பதாய்ச் சொல்லப்படுகிறது (மற்றவர்களுக்கு இல்லை ஆகையால் ஜாக்கிரமும் பொய்யே) 4.95.) எந்தச் சிலர் பிறப்பற்றதாயும் ஸமமாயும், உள்ள ஆத்மதத்துவத்தில் திடமான நிச்சய முடையவர்களோ அவர்கள் பிரபஞ்சத்தில் மஹா ஞானிகள். அவர்களுடைய மார்க்கத்தை உலகம் எட்டுகிறதில்லை.

சாந்தி பாடம்: ஓங்காரமாகிய இந்திரன் என்னைப் புத்தியால் பலவானாகச் செய்யட்டும். ஆத்மஞானமாகிய அழியாச் செல்வத்தைத் தரிப்பவனாக நான் ஆகவேண்டும். என் உடல் அதற்குத் தகுதியுள்ளதாக இருக்க வேண்டும். என் நாக்கு தேன் போன்ற இனிய மொழிகளையே பேச வேண்டும். காதுகள் நல்ல கேள்வியால் பயன் பெற வேண்டும்.

## முதல் பிரச்னம் சீக்ஷாவல்லி

1.) மித்திரன், வருணன், அர்யமா, இந்திரன், பிரஹஸ்பதி, விஷ்ணு எங்களுக்கு மங்களகரனாக இருத்தல் வேண்டும். பிரமத்திற்கு நமஸ்காரம். வாயுவே உன்னை வணங்குகிறேன். ருதம் எனவும் ஸத்யம் எனவும் போற்றுகின்றேன். பிரம்மம் என்னையும் ஆசாரியனையும் காப்பாற்றட்டும். முவ்வகையிலும் சாந்தி நிலவுக. 2.) வர்ணம், ஸ்வரம், மாத்திரை, பலம், ஸாமம், ஸந்தானம் எனச் சீக்ஷாத்தியாயம் (பாகு படுத்திக்) கூறப்படும். 3.1.) அதிலோகம், அதிஜ்யௌதிஷம், அதிவித்யம், அதிப்ரஜம், அத்த்யாத்மம், என்ற ஐந்து அத்தியாயங்களில். அவை மஹா ஸம்ஹிதைகள் எனப்படுவன. உலகத்தைப்பற்றி—பூமி முதல் வடிவம், வானம் பின் வடிவம், ஆகாயம் சந்திக்குமிடம். 3.2.) வாயு சந்தியைச் செய்விப்பது. இங்ஙனம் அதிலோகம். அக்கினி முதல் வடிவம் ஆதித்தியன் பின் வடிவம், ஜலம் சந்திக்குமிடம். மின்னல் சந்தியைச் செய்விப்பது இங்ஙனம் அதிஜ்யௌதிஷம். ஆசாரியன் முதல் வடிவம். 3.3.) சிஷ்யன் பின் வடிவம், வித்தை சந்திக்குமிடம். உபதேசம் சந்தியைச் செய்விப்பது; இங்ஙனம் அதிவித்யம். தாய் முதல் வடிவம் தகப்பன் பின் வடிவம், பிரஜை சந்திக்குமிடம். பிரஜனனம் சந்தியைச் செய்விப்பது. இங்ஙனம் அதிப்ரஜம். 3.4.) கீழுதடு முதல் வடிவம் மேலுதடு பின் வடிவம், வாக்கு சந்திக்குமிடம், நாக்கு சந்தியைச் செய்விப்பது. இங்ஙனம் அத்த்யாத்மம். இவ்வாறாக மஹா ஸம்ஹிதைகள் (விளக்கிக் கூறப்பட்டன)

4.2.) எனக்கு முதலியவை ஸ்ரீயை அருள்வாய். ஆடைகளையும்ப சுக்களையும் ஆடுகளையும் அன்ன பானங்களையும் எப்போதும் அளிக்கும் விரிவுபடுத்திவைக்கும் அந்த சக்தியை அருள்வாய் ஸ்வாஹா! சாந்தமான இந்திரியங்களை ஜயிக்கும் பிரம்மச்சாரிகள் எல்லா திக்குகளிலிருந்து தடையின்றி நாடி வரவேண்டும். 4.3.) நற்கீர்த்தியுடைய செல்வந்தர்களுள் சிரேஷ்டனாக வேண்டும். நான் உன்னிடமும் நீ என்னிடமும்

புகுந்து நிற்க அருள்வாய். உன் மயமாக்கிக் கொள்வாய். 5.1.) வ்யாஹ்ருதிகள் பூ: உலகம்; புவ: அந்தரிக்ஷம்; ஸுவ: ஸ்வர்க்க உலகம் மஹ: அது பிரம்மம். அது பிரம்மத்தின் உடல். நாலு நாலாக வ்யாஹ்ருதிகள் 5.2.) அக்னி, வாயு, ஆதித்யன், சந்திரனும், சூரியனும் மஹ:; ரிக், ஸாம, யஜுர் சாம வேதங்கள் ஓங்காரம் மஹ:; 5.3.) பிராணன், அபானன். வியானன், அன்னம் மஹ:;

6.1.) இருதய ஆகாசத்திலும் தாடையின் மத்தியில் முலைக்காம்பு போல் தொங்கும் உள் நாக்கும் தலை மயிர் களின் வேர் பிரியும் உச்சிவழியும் புருஷன் செல்லும் (சுஷும்னா நாடியின்) மார்க்கம். பூ: என்று அக்கினியிலும், புவ: என்று வாயுவிலும், சேருகிறான். 6.2.) ஸுவ: என்ற ஆதித்தியனிடத்திலும், மஹ: என்ற பிரம்மத்தினிடத்திலும் சுயராஜ்யப் பதவியை அடைகிறான் வாக்குக்கு கண்ணுக்கு காதுக்கு அறிவுக்கு பதியாயுள்ள பிரம்மமாகவே ஆகிவிடு கிறான். 7.) பூமி, அந்தரிக்ஷம், வானம், திசைகள், திசை மூலைகள்; அக்கினி, வாயு, ஆதித்தியன், சந்திரன், நக்ஷத் திரங்கள்; ஜலம், செடி கொடிகள், மரங்கள், ஆகாயம், ஆத்மா (விராட்) இங்ஙனம் அதிபூதம் (பிரபஞ்சத்தைப் பற்றிய விஷய பஞ்சகம்), பிராணன், வியானன், அபானன், உதானன், ஸமானன்; கண், காது, மனம், வாக்கு, மெய்; தோல், மாம்ஸம் தசை, எலும்பு, ஊன்: அதிபூதத்திலுள்ள ஐங்கூறுகளால் அத்தி யாத்மத்திலுள்ள ஐங்கூறுகள் பூர்த்தியடைகின்றன. 8.) ஓங் காரமே பிரம்மம், ஓங்காரமே இது எல்லாம் என்று தியானம் செய்க, ஓம் என்ற இதுவே ஆகட்டும் என்பதற்கும், ஓ! கேள் என்று கூவிச்சொன்னால் கேட்கிறேன் என்பதற்கும் அறிகுறி யாக உள்ளது பிரசித்தம். ஓம் என்று தொடங்கியே ஸாமகானஞ் செய்கின்றனர். ஓம்சோம் என்று தொடங்கி சஸ்திர மந்திரங் களைச் சொல்லுகிறார்கள் ஓம் என்றே அத்வர்யு ப்ரதிகரம் எனும் மறுமொழியை தெரிவிக்கிறார். ஓம் என்றே பிரம்மா அனுமதியைத் தெரிவிக்கிறார். ஓம் என்றே அக்னிஹோத்திரத் திற்கு அனுமதி கொடுக்கிறார். வேதத்தை அடையவேண்டும் என்று அத்தியயனம் செய்விக்கத் தொடங்கும் பிராம்மணன் ஓம் என்றே கூறி ஆரம்பிக்கிறார். சிஷ்யனும் வேதத்தை உள்ளபடி அடையவே அடைகிறான்.

11.1.) வேதத்தைக் கற்பித்த குரு சிஷ்யனுக்கு கட்டளையிடுகிறார் :- உண்மை பேசு; தரும வழியில் நட; ஸ்வாத்தியாயத்தினின்று நழுவி விடாதே. குருவுக்குப் பிரிய

மான தக்ஷிணையைக் கொணர்ந்து கொடுத்து ஸந்ததியாகிற நூலை அறுத்து விடாமலிரு. ஸத்தியத்திலிருந்து மறந்தும் நழுவுதல் கூடாது; தர்மத்திலிருந்து, நன்முயற்சிகளிலிருந்து, பெருமையுள்ளவற்றைப் போற்றுவதினின்று, வேதம் ஓதுவதும் ஓதுவித்தலிலிருந்தும், தேவ பித்ரு காரியங்களினின்று மறந்தும் நழுவுதல் கூடாது, 11.2.) தாயை, தகப்பனை, குருவை, அதிதியை தெய்வமாகக் கொண்டிரு. குற்றமற்ற கருமங்கள் சேவிக்கத்தக்கன; மற்றவை அன்று. எங்களிடம் நன்னடத்தைகள் எவையோ அவையே உன்னால் பின்பற்றத்தக்கவை. மற்றவை அன்று 11.3.) ஏவர்கள் எங்களைக் காட்டிலும் சிரேஷ்டமான பிராம்மணர்களோ அவர்கள் ஆசனத்தில் வீற்றிருக்க நீ மூச்சுவிடக் கூடாது (பேசக்கூடாது) சிரத்தையுடன், வெட்கத்துடன், பயத்துடன், நல்ல எண்ணத்துடன் கொடுக்கப்படவேண்டும். செய்ய வேண்டிய காரியத்தில் நடக்க வேண்டிய முறையில் சந்தேகமாவது உனக்கு உண்டானால் 11.4.) அங்கு தீர விசாரித்துணரும் திறமை வாய்ந்தவர்களும், முறைப்படி ஒழுகுபவர்களும், பிறருடைய ஏவுதலுக்குட்படாதவர்களும், குரூரஸ்வபாவம் இல்லாதவர்களும், தர்மத்தில் திடமான பற்றுள்ளவர்களுமான பிராம்மணர்கள் அவ்விஷயங்களில் எங்ஙனம் நடந்துகொள்கிறார்களோ அங்ஙனமே நீயும் நடந்துகொள்ள வேண்டும். இதுவே கட்டளை. இதுவே உபதேசம். இதுவே வேத ரகஸ்யம். இவ்விதமே செய்யத்தக்கது. 12.) மித்திரன், வருணன், அர்யமா, இந்திரன், பிரகஸ்பதி, விஷ்ணு எங்களுக்கு மங்களகரனாக வேண்டும். பிரம்மத்திற்கு நமஸ்காரம், வாயுவே நீயே ருதம் ஸத்தியம், அது என்னைக் காக்கவேண்டும் அது ஆசாரியனைக் காக்கவேண்டும்.

## இரண்டாவது பிரச்னம் ஆனந்தவல்லீ

ஓம் (குரு சிஷ்யர்களாகிய) எங்களை இருவரையுஞ் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும். நாங்கள் இருவரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக. எங்கள் அத்தியயனம் கூர்மையுள்ளதாகவும் பிரகாசமுள்ளதாகவும் ஆகவேண்டும். (ஒருபோதும் நாங்கள்) துவேஷிக்காமலிருக்க வேண்டும். ஓம் மூவ்வகையிலும் சாந்தி நிலவுக. 2 ) பூமியில் உள்ள மக்கள் எல்லாம் அன்னத்திலிருந்தே உண்டாகின்றனர். பின் அன்னத்தாலேயே ஜிவிக்கின்றனர். கடைசியில் அதுவாகவே முடிகின்றனர். அன்னமன்றோ ஸர்வௌஷதம் எனப்படுவது; வளர்கிறதும் உண்ணப்படுகிறதும் உண்கிறதும் அன்னம். இந்த அன்னஸ மயத்தினும் வேறானது இதனுள்ளிருக்கும் பிராணமய ஆத்மா அதனால் இது பூர்ணமாயிருக்கிறது

அதுவும் புருஷனைப் போலவே உருவுடையது (தனியுருவ மில்லை) தேவர்கள் பிராணனை அனுசரித்தே ஜிவிக்கின்றனர். பிராணன் பிராணிகளுக்கெல்லாம் ஆயுளாயிருப்பதாலன்றோ அது ஸர்வாயுஷம் எனப்படுகிறது. புருஷனுக்குப் பிராணனே தலை, வியானன் வலது பக்கம்; அபானன் இடது பக்கம்; ஆகாசம் நடுவுடல்; ஆதாரமான பிருதிவி வால். 3.) பிராண மயத்தினும் வேறானது மனோமய ஆத்மா. அந்த புருஷனுக்கு யஜுர் வேதமே தலை; ருக் வேதமே வலது பக்கம்; ஸாம வேதமே இடது பக்கம், வேத ஆஜ்ஞை நடுவுடல்; ஆதார மான அதர்வவேதம் வால். 4.) மனோமயத்திலும் வேறானது விஜ்ஞானமய ஆத்மா. அந்தப் புருஷனுக்கு சிரத்தையே தலை; ஒழுங்கு (ருதம்) வலது பக்கம். உண்மை (ஸத்யம்) இடது பக்கம்; (யோகம்) ஸமாதி நடுவுடல்; ஆதாரமான மஹத் தத்வம் வால். தேவர்களைவரும் விஜ்ஞானத்தையே முதலில் தோன்றிய 5.) பிரம்மமாக உபாஸிக்கின்றனர் சரீரத்தில் பாவங் களை நீத்து இன்பங்களை யனுபவிக்கிறான். விஜ்ஞான மயத்தினும் வேறானது ஆனந்தமய ஆத்மா, அந்த புருஷனுக்கு பிரியமே தலை; மகிழ்ச்சியே வலது பக்கம். மகிழ்ச்சி பொங்கு தலே இடது பக்கம்; ஆனந்தம் நடுவுடல். ஆதாரமான பிரம்மம் வால் (பிரம்மத்திற்கு ஆதாரம்வேறொன்றும் இல்லை)

6.) பிரம்மத்தை அறியாதவன் எவனாயினும் சரீரத்தை விட்ட பின் இந்த பரமாத்ம உலகை எய்துவானா இல்லையா? தவிர பிரம்மத்தை அறிந்தவன் எவனாவது சரீரத்தை விட்ட பின் இந்த பரமாத்ம உலகை அனுபவிக்காமலிருப்பானா. அனுபவிப்பானா? (விடை) பரமாத்மா வெகுவாக விரிந்து வளர சங்கற்பித்து அது தவத்தைச் செய்து இங்கு எதெது உண்டோ அது எல்லாவற்றையும் சிருஷ்டித்து அதனுள் புகுந்து உருவாகவும் அருவாகவும், ஸகுணமாகவும் நிற்குண மாகவும், உளதாயும் இலதாயும், இடமுடையதாகவும் இட மேதுமிலதாகவும், சித்தாயும் அசித்தாயும், அந்த பரமார்த்த ஸத்தியமே ஆயிற்று. (இந்த ஸத்தியத்திற்கும்) ஸத்தியம் என்று அது கூறப்படும் 7.) அது தன்னைத் தானாகவே (நாம ரூப பிரபஞ்சமாகச்) செய்து கொண்டது. எது ஸ்வயங் கர்த்தாவோ அதுவே (ஆனந்த) ரஸம். இந்த ரஸத்தை யடைந்தேயன்றோ இவன் (உண்மையான) ஆனந்தமுள்ள வனாகிறான். இந்த ஆனத்தம் (பிரம்மானந்த ரஸம்) ஆகா சத்தில் இல்லாமலிருந்தால் எவன் அபான வாயுவால், பிராணவாயுவால் இயங்கும் செயல்களைச் செய்ய முடியும். இதுவேயன்றோ (உலகிற்கு) ஆனந்தம் அளிப்பது? உருவும்

உடலும் குறியும் இடமும் இல்லாத இந்தப் பரம்பொருளில் நிலை பெறும் போது பயமற்ற நிலையடைகிறான். எப்போது இவன் ஒரு சிறிதேனும் பேதத்தைச் செய்கிறானோ அப்போதே அவனுக்கு வித்வானாயினும் எண்ணிப் பாராதவனுக்கு அதுவே பயத்துக்குக் காரணமாகவும் ஆகின்றது.

8.) பரமாத்மாவினிடம் பயத்தால் காற்று, சூரியன், அக்கினி, இந்திரன், யமன் ஆகிய தேவதைகள் தத்தந் தொழிலைச் செய்கின்றனர். இந்த பிரம்மானந்தத்தின் நிர்ணயம் வருமாறு:- ஸாதுவாயும் யௌவனமுள்ளவனாயும் அத்தியயனம் செய்தவனாயும் ஏவல் திறமையுள்ளவனாயும் திடசித்தமும் உடல் வன்மையும் பெற்றவனாயும் ஒருவன் இருந்து எல்லாச் செல்வங்களும் நிறைந்த இந்த பூமி முழுவதும் அவனுடையதாகவும் இருக்குமேயானால் அது ஒரு மனித ஆனந்தத்தின் அளவு. இதன் நூறு மடங்கு மனித கந்தர்வர்களடைவது; இதன் நூறு மடங்கு தேவ கந்தர்வர்களடைவது. இதன் நூறு மடங்கு பிதிருக்களடைவது. இதன் நூறு மடங்கு கர்மதேவர்களடைவது. இதைப் போல் நூறு மடங்கு (முக்கியமான) தேவர்களடைவது. இதைப் போல் நூறு மடங்கு இந்திரனடைவது. இதைப் போல் நூறு மடங்கு பிருஹஸ்பதியுடையது இதைப் போல் நூறு மடங்கு (விராட் புருஷனாகிய) பிரஜாபதியடைவது. இதைப் போல் நூறு மடங்கு (ஸூத்ராத்மாவான) பிரம்மாவின் ஆனந்தத்தின் ஒரு அளவு. கேள்வியிற் சிறந்தவனாயும் (முன் கூறிய) ஆசைகளில் மடியாதவனாயும் உள்ளவனுக்கும் (ஆசைகளை வீட்ட அளவு) ஆனந்தம் கிட்டுகிறது. எவன் இந்தப் புருஷனிடம் (இருதயகுகையில்) உள்ளவனோ அவனும், எவன் சூரியனிடம் உள்ளவனோ அவனும் ஒருவனே. 9.) எதினின்று எட்டிப் பிடிக்க முடியாமல் வாய்ச் சொற்கள் திருப்பி விடுகின்றனவோ - மனதுடன் கூட — அந்தப் பிரம்மானந்தத்தை அறிந்தவன் எக்காரணத்தாலும் பயமடைவதில்லை. நான் நல்லதை ஏன் செய்யாது போனேன்: நான் பாவத்தை ஏன் செய்தேன் என்ற எண்ணம் இவனை வருத்துவதில்லை. இங்ஙனம் எவன் அறிகிறானோ அவனுடைய ஆத்ம ஞானத்தை புண்ணிய பாவங்களுங்கூட திடப்படுத்துகின்றன. எவன் இங்ஙனம் புண்ணிய பாவங்களில் பற்று துன்பத்திற்குக் காரணம் என்றும் ஆத்ம ஞானம் துன்பத்தைத் துடைப்பது என்றும் அறிகின்றானோ அவன் அந்த ஞானத்தால் (புண்ணிய பாவங்களை வீரிய மற்றவையாகச் செய்து) ஆத்மாவையே போற்றுகிறான். இங்ஙனம் உபநிஷத்து (விளக்கப் பெற்றது)

பிருகுரிஷி, ஐயனே பிரம்மத்தை உபதேசித்தருள்க என, வருணன் சொன்னார்:- அன்னம், பிராணன், கண், காது, மனம், வாக்கு. (பிரம்மத்துவாரங்கள்) உண்டாய பிராணிகளெல்லாம் எதனிடமிருந்து உண்டாயினவோ, முடிவுறும் போது எதனிடம் புகுந்து மறைகின்றனவோ, உண்டாகியவை எதனிடம் உயிர் வாழ்கின்றனவோ அதை ஆராய்ந்தறிய முயல்வாய்; அதுவே பிரம்மம். தவத்தாலேயே பிரம்மத்தை ஆராய்ந்தறிய முயல்வாயாக. தவமே பிரம்மம் என்றார். பிருகு தவம் செய்து 2) அன்னம் பிரம்மம் என்று ஆராய்ந்து அறிந்தார். 3,) மீண்டும் தவம் செய்து பிராணன் பிரம்மம் என்றும் 4.) மீண்டும் தவஞ் செய்து மனம் பிரம்மம் என்றும் 5.) மீண்டும் தவஞ் செய்து விஜ்ஞானம் பிரம்மம் என்றும் 6.) மீண்டும் தவஞ் செய்து ஆனந்தம் பிரம்மம் என்று ஆராய்ந்து அறிந்தார். ஆனந்தத்திலிருந்தேயன்றோ இப்பிராணிகள் எல்லாம் உண்டாகின்றன — உயிர் வாழ்கின்றன — மறைகின்றன. இதுவே பிருகு உணர்ந்த வித்தை (ஆனந்தமயமான) பரம ஆகாசத்தில் நிலை பெறுவதாம். இங்ஙனம் அறிகிறானோ அவன் (பிரம்மத்தில்) நிலை பெறுகிறான். மகானாகிறான்.

7.) அன்னத்தை இகழக்கூடாது. அது விரதம். (எது உண்ணப்படுகிறதோ அது அன்னம். எது உண்கிறதோ அது அன்னாதம்) பிராணனும் சரீரமும் அன்னமும் அன்னாதமும் ஆகின்றன. பிராணனிடம் சரீரம் ஒடுங்கி நிற்கும். சரீரத்தில் பிராணன் ஒடுங்கி நிற்கும். இவ்வாறாக அன்னம் அன்னத்தில் ஒடுங்கிநிற்கின்றது. கீர்த்தியால் மகானாகிறான் 8.) அன்னத்தைஎறியாதே. அதுவிரதம்.நீரும் நெருப்பும்அன்னமும் அன்னாதமும் ஆகின்றன நீரில் நெருப்பு ஒடுங்கி நிற்கும். நெருப்பில் நீர் ஒடுங்கி நிற்கும்......கீர்த்தியால் மகானாகிறான். 9.) அன்னத்தை மிகுதியும் உண்டாக்க வேண்டும். அது விரதம். பூமியும் ஆகாசமும் அன்னமும் அன்னாதமும் ஆகின்றன. பூமியில் ஆகாசம் ஒடுங்கி நிற்கும். ஆகாசத்தில் பூமி ஒடுங்கி நிற்கும்......கீர்த்தியால் மகானாகிறான், 10.1.) வீட்டை நாடி வந்த எவரையும் தள்ளிவிடக்கூடாது. அது விரதம். ஆகையால் எவ்விதத்திலாவது மிகுதியும் அன்னத்தை தேடிக்கொள்ள வேண்டும். வந்தவர்க்கு அன்னம் ஆயத்தமாயிருக்கிறதென்று சொல்லுவர் (பெரியோர்)

10.2.) பிரம்மசக்தியே பாதுகாப்பாக வாக்கில் உளதென்றும், பிராணாபான சக்திகளில் யோகக்ஷேமமாகவும், கைகளில் கருமமாகவும், கால்களில் நடையாகவும் எருக்குழியில்

மலப்போக்காகவும் சரீர உபாசனை, மழையில், மகிழ்ச்சியா கவும், மின்னலில் மிகுந்த சக்திவடிவாகவும் அதிதைவம்; 10.3.) பசுக்களில் புகழ்ச் செல்வமாகவும், நக்ஷத்திரங்களில் ஒளியா கவும், கருக்குழியில், அழிவிலாத ஸந்ததியை வளர்க்கும் ஆனந்தமாகவும், ஆகாசத்தில் அனைத்துமாகவும் (பிரம்ம சக்தியே என உபாசிக்கவும்) அதை ஆதாரமென உபாசித்தால் இவன் ஆதாரத்தை உடையவனாகிறான். அதை மஹத்தென உபாசித்தால், மஹானாகிறான், மனம் என உபாசிக்க மனோ வன்மை பெறுகிறான். 10 4.) அதை நம: என்று உபாசித் தால் காமங்கள் இவனை வணங்கி நிற்கும். அதை வேத மென்று உபாசித்தால் வேதத்தை உணர்ந்தவனாவான். அதை பிரம்மாண்டத்தின் பரிமரம் (நாசசக்தி) என உபாசித் தால் இவனைச் சூழ்ந்து பகைக்கின்ற சத்துருக்களும் இவனிடம் பிரியமில்லாத விரோதிகளும் நாசமடைகின்றனர்.

10.5.) உள்ளுறைபவனும் சூரியனிடத்தில் உறை பவனும் ஒன்றே என்று அறிந்தவன் இவ்வுலகை நீத்து, அன்னமய, பிராணமய, மனோமய, விஜ்ஞானமய, ஆனந்த மயமான ஆத்மாவை அடைந்து இஷ்டமானதை உண்பவனா யும், இஷ்டமானஉருவத்தை ஏற்பவனாயும், இவ்வுலகங்களில் ஆச்சரியம் ஆச்சரியம் ஆச்சரியம் என ஆனந்தமாகப் பாடிக் கொண்டு சஞ்சரிப்பான். 10.6.) நானே அன்னம். நானே அன்னாதம். உணவுக்கும் உண்பவனுக்கும் உள்ள உறவை உண்டாக்கியவனும் நானே. (அன்ன ரூபியான) என்னை எவன் கொடுக்கிறாரோ அவன் இதனால் ஆத்ம ரக்ஷணம் செய்தவனாகிறான். (இங்ஙனம் அறிந்து கொடுக்காவிட்டால்) உண்பவனை உணவாகிய நான் உண்டு விடுகிறேன். சூரியனுடைய ஒளி போன்றது (என் ஒளி) இவ்வாறாக அறிபவன் முக்தி எய்துகிறான்.

தபஸா சீயதே ப்ரஹ்ம (மு.1.1.8.)
ப்ரணவோ தனு: சரோஹ்யாத்மா ப்ரஹ்மதல்லக்ஷ்ய முச்யதே. (மு.2.2.4.)
ஸத்யேன லப்ய: ஸத்யமேவ ஜயதே (மு.3.1. 5ம் 6ம்)
அயமாத்மா ப்ரஹ்ம (ஐத. 3.3.)
ஸத்யம் வத தர்மஞ் சர (தை சீ. 11.1.)
மாத்ரு பித்ரு ஆசார்ய அதிதி-தேவோ பவ (தை.சீ. 11.2.)
ஸத்யம்—ஜ்ஞான—மனந்தம் ப்ரஹ்ம (தை.ஆன. 1.)
ஆனந்தோ ப்ரஹ்மேதி வ்யஜானாத் (தை. பிருகு. 6.)
தந் நம இத்யுபாஸித நம்யந்தே அஸ்மை காமா: (10.4.)

சாந்தி பாடம் - (குரு சிஷ்யர்களாகிய) எங்கள் இருவரை யும் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும். எங்கள் இருவரை யும் சேர்த்துப் போஷிக்கட்டும். நாங்கள் இருவரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக. எங்கள் அத்தியயனம் கூர்மையுள்ளதாகவும் பிரகாசமுள்ளதாகவும் ஆக வேண்டும் (நாங்கள் ஒருவரையொருவர்) த்வேஷிக்காமலிருக்க வேண்டும்

1.1.1.) கரைகாணாத நீர்ப் பெருக்கிலும், புவனத்தின் மத்தி யிலும் வானுலகின் உச்சியிலும் உள்ள பிரஜைகளின் நாயகன், பெரியதிற்கெல்லாம் பெரியவன், விதை வடிவில் ஒளிகளில் புகுந்து கருவினுள் சஞ்சரிக்கிறான். 1.4.1.) (ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற) மூன்று நிலைகள் (இருதய) குகையில் (அவனாலேயே) வைக்கப்பட்டுள்ளன. அதை அறிந்தவன் தந்தைக்கும் தந்தை ஆகிறான். ஈசுவரனே நமக்கு உறவினனும், பிதாவும், அனைத்தையும் அளிப்பவனும் 1.2.5.) இந்தப் பரம புருஷனுடைய முடியையோ, சுற்றள வையோ, இடையையோ எட்டிப்பிடித்தவர் இல்லை. அவரை அடக்கி அளவு படுத்திக்கூற எவரும் இல்லை. அவருடைய பெயர் பெருங்கீர்த்தி. 1.4.4.) அற்புதமானவனும், பிரியமான வனும், இந்திரனால் விரும்பிப் போற்றப்படுபவனும், புத்தி சக்தியையளிப்பவனும் ஆகிய அந்த உலக நாயகனை அடைய நான் அவாவுகிறேன். (அனைத்தையும் அறியும்) அக்கினி தேவனே! (அதற்கு என்னை உரியவனாக்க) என்னுடைய பாவக்குவியலை அழிக்கும் பொருட்டுக் கொழுந்து விட்டு எரிவாயாக. 1.5 3. அந்த தத்புருஷனை அறிவோமாக. மஹாதேவனை தியானிப்போமாக. ருத்திரனே அதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள்வாராக. 1.7'3.) காத்யாயனியை அறிவோமாக. கன்னியாகுமரியை தியானிப்போமாக. துர்க்கா தேவியாகிய அவளே அதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள் வாளாக.

1.7.4.) தூர்வாஸூக்தம் - ஆயிரக்கணக்கான பாவனப் பொருள்களில் சிறந்ததும் நூற்றுக்கணக்கான வேர்களையும் நூற்றுக்கணக்கான முளைகளையும் உடையதும் அருகம்புல். (அதில் உறையும்) தூர்வாதேவி கெட்ட கனவுகளை நாசம் செய்பவள். அவள் என்னுடைய பாவமனைத்தையும் போக்கி அருளட்டும். கிளைக்குக்கிளை, கணுவுக்குக்கணு வளர்ச்சியுறும் தூர்வையே! ஆயிரக்கணக்கிலும் நூற்றுக்கணக்கிலும்எங்களை யும் அவ்வாறே வளரச் செய்வாயாக.

1.10.3.) (சத்ருஜயமந்த்ரம்) – ஸூக்தத்தின் மூலம் பிரீதி செய்யக் கூடியவளும், எவராலும் ஜயிக்க முடியாதவளும், என்றும் புஷ்டியை அளிப்பவளும், எல்லாம் நிறைந்தவளும், எல்லா உயிர்களுக்கும் ஈசுவரியும் ஆன மஹாலக்ஷ்மியை இங்கே எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன். 1 10.4.) மஹாலக்ஷ்மி எனக்கு அருள் புரியட்டும். அலக்ஷ்மி என்னிடமிருந்து விலகட்டும். விஷ்னுவை முதல்வராய்க் கொண்ட தேவர்கள் ஜயிக்க முடியாத உலகங்களை வேதங்களினால் ஜயித்தார்கள். மஹானாகிய இந்திரனும் பதினாறு கலைகளுள்ள ஸோமனும் நமக்கு நன்மை தரட்டும். 1.11.3.) யாதம் பரிசுத்தமளிப்பது, எங்கும் வியாபித்தது. அனைத்திற்கும் முந்தியது. அதனால் பரிசுத்தமானவன் தீச்செயல்களைக் கடந்து செல்கிறான். தூய பாதங்களால் தூயவர்களாகி நாம் பாவங்களையும் பகைவர்களையும் கடந்து செல்வோமாக.

1.15.2.) (அகமர்ஷணஸூத்தம்–ப்ரஹ்மஸ்மி மந்திரம்) -நீர் முதலிய பஞ்ச பூதங்களில் பிரகாசிக்கும் ஜோதி நானே. (உடலில்) கண் முதலிய இந்திரியங்களில் ஜ்வலிக்கும் ஜோதி நானே. நான் நான் என்று (உடல் தோறும்) எது உள்தோ அந்த பிரம்மமே நான். அறியாதவர்களிடம் அஹமாக இருப்பது நானே; அறிந்தவர்களிடம் பிரம்மமாக இருப்பது நானே. நான் நானாகவே இருக்கிறேன். நான் என்னையே பிரம்ம ஜோதியில் ஹோமம் செய்கிறேன். (அறிவு-அஸ்தி ப்ரஹ்மம்; அனுபவம்–அஹம் பிரஹ்மம்; யஜுர் வேத மந்திரம்)

2.1.) துர்க்காஸூக்தம்:– அக்கினிவடிவில் விளங்கும் சக்திக்கு ஸோமரஸத்தைப் பிழிந்து தருவோம். அனைத்தையும் அறியும் அந்த சக்தி எமது பகைமைகளைப் பொசுக்கட்டும். அது எமது எல்லா ஆபத்துக்களையும் போக்கட்டும். கப்பலால் கடலைக் கடப்பது போல் பாவக்கடலிலிருந்து அக்கினி சக்தி நம்மை அக்கரை சேர்க்கட்டும். 2.2.) செந்தீ வண்ணத்தினளும், தனது ஒளியால் எரிப்பவளும், ஞானக் கண்ணால் காணப்பட்டவளும், கரும பலனைக் கூட்டி வைப்பவளுமான துர்க்காதேவியை நான்சரணடைகின்றேன். பிறவிக் கடலை எளிதில் கடத்துவிப்பவனே! கடத்துவிக்கும் உனக்கு நமஸ்காரம்.

5. வ்யாஹ்ருதிஹோமமந்திரம்:- பூ:- அக்கினிக்கும், பிருதிவிக்கும், மஹத்தத்துவத்திற்கும் ஹோமம். புவ:- வாயுவுக்கும், அந்தரிக்ஷத்திற்கும் மஹத்தத்துவத்திற்கும் ஹோமம்

ஸுவ:- ஆதித்தியனுக்கும், வானுலகுக்கும் மஹத்தத்துவத் திற்கும் ஹோமம். பூ: புவ: ஸுவ:- சந்திரனுக்கும் நக்ஷத்திரங் களுக்கும், திக்குகளுக்கும் மஹத் தத்துவத்திற்கும் ஹோமம். தேவர்களுக்கு நமஸ்காரம். (அன்னமே—அக்கினியே 3ம்; 4ம்;— ஓங்காரம்) பிதிருக்களுக்கு ஸ்வதா என்று வணக்கம். பூ: புவ: ஸுவ: மஹ: என்பது ஓம். (பாவத்தைக் கண்டு நடுங்கி)

10.) உண்மை பேசுதல் தவம். உண்மையாக நடத்தல் தவம். கேள்வி தவம். அமைதி தவம். புலனடக்கம் தவம், மனவடக்கம் தவம். ஈகை தவம் வேள்வி செய்தல் தவம். பூ: புவ: ஸுவ: என்பது பிரம்மம். இதை உபாசித்தல் தவம். 11) நன்றாக பூத்த ஒரு மரத்தின் மணம் எங்ஙனம் தூரத் திலிருந்து காற்றினால் கொண்டு செல்லப்படுமோ அங்ஙனமே புண்ணியச் செயல்களின் மணம் தூரத்திலிருந்து கொண்டு செல்லப்படும். எங்ஙனம் ஒரு வாளின் கூரிய பக்கம் ஒரு பள்ளத்தின் மேல் பொருத்தி வைக்கப்பட்டிருக்கையில் நான் பள்ளத்தில் விழுந்துவிடுவேன் என்று நடுங்குவானோ அங்ஙனம் அழியாத பதவியை விரும்பும் ஒருவன் (பாவத்தைக் கண்டு நடுங்கி) தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும்.

12.1.1.) தஹரவித்தை:- அணுவுக்கும் அணுவாயும் பெரிதுக்கும் பெரிதாயும் உள்ள ஆத்மா இந்த ஜீவனுடைய உள்ளத்தில் உறைவது. செயலைக் கடந்த அந்த ஆத்மாவை அந்தக்கரணங்களின் தெளிவால் ஒருவன் காண்கிறான். சோகமற்றவனாய் அந்த ஆத்மாவின் பெருமையையும் உணர் கிறான். 12.1.5.) சிவப்பும் வெளுப்பும் கருப்புமாயுள்ள ஒரு ஆட்டுக்கிடாரியை ஒரு ஆட்டுக்கடா விரும்பிக் கூடித் தன் வடிவிற்கொத்த பல குட்டிகளைப் போட்டுக்கொண்டிருக்கிறது. மற்றொரு ஆட்டுக்கடா அதை அனுபவித்து விட்டு விலக்கி விடுகிறது. (ரஜஸ் ஸத்வ தமஸ் என்ற முக்குணவடிவான மூலப்பிரகிருதி மாயையைக் குறிக்கும்)

12.2.1.) சுத்தமான ஆகாயத்தில் சூரியனாகவும் இடை வெளியில் காற்றாகவும், யாகமேடையில் அக்கினியாகவும், வீட்டில் அதிதியாகவும், (ஜீவ சைதன்யமாக) மனிதர் களிடையும், (சிறப்பாக) தேவர்களிடையும், நேர்மையான நடத்தையாகவும், வானில் வாழ்வதாகவும், நீரில் பிறப்ப தாகவும், சூரிய கிரகணங்களில் பிறப்பதாகவும், உலகின் அழகிலும் ஒழுங்கிலும் தோன்றுவதாயும், மலையில் பிறப்ப தாயும், பேருண்மையான ஒன்றே உளது. (ருதம்—ஸத்யம்)

12.2.3.) ஸமுத்திரத்திலிருந்து அலைகலைப்போல் பரமாத்மா விடமிருந்து இன்பமளிக்கும் பிரபஞ்சம் தோன்றிற்று. அந்த பரஞ்சோதியின் ரகஸ்ய நாமம் (ஓம்) எது உண்டோ அதை மெதுவாக (உதடுகள் மட்டும் அசையும்படி) ஜபித்து ஒருவன் சாகா நிலையை எய்துவான். இது தேவர்களின் நாவில் உறைவது. அழியாத ஆனந்தத்திற்கு நடுவில் ஆதாரமாய் விளங்குவது. 12.2.5.) (ரிஷபத்திற்கு ஒப்பிடப்பட்ட ஓங்கார மாகிய) இதற்குக் கொம்புகள் நான்கு, கால்கள் மூன்று. தலைகள் இரண்டு; இதற்குக் கைகள் ஏழு; முப்பிரியால் கட்டப்பட்டுள்ள இந்த ரிஷபம் மஹ: எனும் பிரம்ம தத்து வத்தை உரத்துக்கூவி விளங்குகிறது. ஸ்வயம் பிரகாசப் பொருளான தெய்வம் மனிதர்களிடம் புகுந்துறைகின்றது. (4: அ–உ–ம–நாதம்; 3: ஜாக்ரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி; 2: பரா–அபரா ப்ரக்ருதிகள்) 12.3.4.) கர்மத்தாலோ, மக்கட் பேறாலோ, பொருளாலோ அன்று; தியாகத்தாலே தான் சிலர் சாகா நிலையை அடைந்திருக்கின்றனர். ஸ்வர்கத்திற்கும் மேலானது (அறிவாளிகளின் புத்தியாகிய) குகையில் வைக்கப் பட்டுப் பிரகாசிப்பதுமான இதை ஞான வாழ்க்கையில் முயல் வோர் அடைகின்றனர்.

13.1.1 ) நாராயணஸூக்தம்:– ஆயிரக்கணக்கான தலைகளை உடையவரும், ஒளிமிக்கவரும், எல்லாவற்றையும் பார்க்கிறவரும், உலகிற்கெல்லாம் மங்களத்தைச் செய்பவரும், உலகாயிருப்பவரும், அழிவில்லாதவரும், சென்றடையத்தக்க ஒப்புயர்வற்ற பதவியாகியவருமான நாராயணன் எனும் தெய்வத்தை தியானம் செய்கிறேன். 13.1.2.) பக்தர்களுடைய பாபத்தையும் தாபத்தையும் போக்குபவரும் ஆகிய உள்ளு ரையும் நாராயணனை ஹரியை தியானம் செய்கிறேன். 13.1.4.) நாராயணனே சிறந்த ஒளி. நாராயணனே பரமாத்மா. நாராயணனே பரப்பிரம்மம்; நாராயணனே சிறந்த தத்துவம்.

13.2.2.) இருதயமானது கீழ்நோக்கிய தாமரை மொட்டுப்போல் விளங்குகிறது. கழுத்தெலும்பிற்கும் நாபிக்கும் ஒருசாண்தூரத்தில் இருதயமிருக்கிறது. 13.2.3.) உலகிற் கெல்லாம் சிறந்த உறைவிடம் ஜ்வாலைக் கொழுந்தால் சூழப்பட்டாற் போல் அதனுள் பிரகாசிக்கின்றது. தாமரை மொட்டுப் போன்ற இருதயம் நாற்புறங்களிலும் நரம்புகளின் பிடிப்பால் தொங்குகிறது 13.2.4.) அதன் உள்ளே மிகச் சிறியதான துவாரம் உளது. அதில் அனைத்தும் நிலை பெற்றுள்ளது. அதனுடைய மத்தியில் எங்கும் ஒளி வீசுவ

தாயும் எல்லாத் திக்கிலும் செல்லுவதாயுமுள்ள சிறந்த அக்கினி ஒன்று உண்டு. 13.2.5.) அந்த அக்கினி வடிவான பகவான் முதலில் உண்பவராகவும், உணவைப் பிரித்துக் கொடுத்துக் கொண்டு நிலைத்து நிற்பவராயும், தான் பழுது படாதவராயும் அனைத்தையும் காண்பவராயும் இருக்கிறார். அவருடைய கிரணங்கள் குறுக்கிலும் மேலும் கீழும் பரவி எப்போதும் வியாபித்திருக்கிறது. 13.2.6.) அது உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை தன்னதாகக் கொண்ட உடலைச் சூடுள்ளதாகச் செய்கிறது. அதன் நடுவில் மெல்லியதான அக்கினி ஜ்வாலை மேல் நோக்கி அமைந்திருக்கிறது. 13.2:7.) கருத்த மேகத்தின் நடுவிலிருந்து ஒளி வீசுகின்ற மின்னல் கொடி போன்றும் செந்நெல்லின் ஊகுபோல் மெல்லியதாகவும், பொன்னிறமாயும் அணுவைப் போல் சூக்ஷ்மமாயும் அது பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. 13.2.8.) அந்த ஜ்வாலையின் நடுவில் பரமாத்மா நிலை பெற்றிருக்கிறார். அவரே பிரம்மா, அவரே சிவன், அவரே விஷ்ணு, அவரே இந்திரன்: அவரே அழிவற்றவரும் தன்னையாள்பவர் எவருமில்லாதவருமான பரமபுருஷர்.

15.) ஆதித்யனே இவை எல்லாம்—ஒளி (தேஜஸ், ஞான சக்தி ), வீர்யம் (ஒஜஸ், பிராணசக்தி). பதம் (இந்திரிய சக்தி), ஸத்கீர்த்தி (யச:), கண், காது, சரீரம், மனம், கோபம், மனு, யமன், ஸத்யதேவதை; மித்ரன், வாயு, ஆகாசம், பிராணன், லோகபாலகர் பிரம்மா; பிரஜாபதி (க:), அநிர்வனீயம் (கிம்), கமனீயத்வாத் ஸுகரூபம் (கம்), காரணம் காரியம் (ஸத்யம்), பரோக்ஷரூபம் (தத்). விவரிக்க முடியாத தத்துவம், மெய்ப் பொருள்; அன்னம், அம்ருதம், ஜீவன், உலகம்; எல்லை யில்லா ஆனந்தம், தானே தோன்றிய ப்ரம்மா; இந்த ஆதித்ய புருஷன் அழிவில்லாத பரம்பொருள், எல்லா உயிர்களுக்கும் அதிபதி. இங்ஙனம் அறிபவன் பிரம்மாவுடன் ஸாயுஜ்யப் பதவியையும் ஸாலோகப்பதவியையும் அடைவான். தேவர் களுடன் ஸாயுஜ்யப் பதவியையும், ஸமான ஐச்வரியத்தையும், ஸமான லோகத்தையும் அடைவான். இங்ஙனம் உபதேச ரகசியம்.

16.1,) சிவ பூஜை:— மஹாப்பிரளய ஸாக்ஷியான சிவனுக்கு நமஸ்காரம். யமனுக்கும் யமனாகியவருக்கு நமஸ் காரம். தத்துவங்களுக்கெல்லாம் மேலாகியவருக்கு நமஸ் காரம். ஊர்த்வலிங்கமான ஸதாசிவ தத்துவத்துக்கு நமஸ் காரம். மங்கள வடிவினருக்கு நமஸ்காரம். பொன்னாலான

லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். சிறந்த காந்தி படைத்தவருக்கு நமஸ்காரம்; நல்ல காந்தி பொருந்திய லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். திவ்ய சுகஸ்வரூபிக்கு நமஸ்காரம். தேவலோகத்தில் விளங்கும் லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். உலகின் உற்பத்தி வடிவினருக்கு நமஸ்காரம். 23.) காணும் பொருள்களின் அழகாயும், காட்சிக்கு ஆதாரமாயும் உள்ள பரப்பிரம்மத்தை, உடல் தோறும் உறைபவரை, கருஞ்செம்மை வண்ணனை, வீரியத்தின் மேல்நோக்குடையவனை, முக்கண்ணனை, எல்லாந் தன் வடிவாய்க் கொண்டவனை மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கின்றேன்.

28) பூதேவி மந்திரம்:- தேவர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், பிதிருக்கள், அசுரர்கள், ஆகிய எல்லா உயிர்களுக்கும் (அதிதி என்ற) பூதேவியே தாய். அவள் இளகிய நெஞ்சம் படைத்தவள், பெருமை மிக்கவள், போற்றத்தக்கவள்; அவளேஸாவித்திரியும் காயத்ரியும். அவளேஉலகனைத்தையும் தாங்குபவள் பூமியாயிருப்பவள், ஐம்பூதங்களுள் ஒன்றுகியவள்.

30.) ஸந்த்யாவந்தன மந்திரம்:- ஜலதேவதை தனக்குறைவிடமாகிய பூமியைப் புனிதமாக்கட்டும். அங்ஙனம் புனிதமாக்கப்பட்ட பூமி என்னைப் புனிதமாக்கட்டும், அது வேதத்திற்கு உறைவிடமாகிய ஆசாரியனையும் புனிதமாக்கட்டும். பிறர் உண்ட மிச்சமும் புசிக்கத்தகாததுமான எது என்னால் புசிக்கப்பட்டதோ அல்லது என்னுடைய எந்த துர்நடத்தை உண்டோ, மேலும் கெட்டவர்களிடமிருந்து ஏற்றுக்கொண்டது எது உண்டோ அவை எல்லாவற்றினின்றும் என்னை ஜல தேவதை புனிதமாக்கட்டும் என்று பிரார்த்தித்துப் புனிதமான என்னைப் பரமாத்மஜோதியில் ஹோமம் செய்கின்றேன். 31.) அக்கினியும் அனைவரையும் அடிமை கொள்ளும்கோபமும் கோபத்தையாளும் தெய்வசக்திகளும், கோபத்தாற் செய்யப்பட்ட பாவங்களினின்று என்னைக் காப்பாற்றட்டும். பகலில் மனத்தாலும் வாக்காலும் கைகளாலும், கால்களாலும், வயிற்றாலும், ஆண்குறியாலும் எந்தப் பாவத்தைச் செய்தேனோ, இன்னும் என்னிடத்தில் என்ன பாவம் உண்டோ அதையும் பகலின் அதிதேவதை நீக்கியருள வேண்டும். இங்ஙனம் பாவம் நீங்கிய என்னை நான் மோக்ஷத்திற்குக் காரணமாகியதும் முக்காலத்தும் ஸத்தியமாகியதுமான பரஞ்ஜோதியில் ஹோமம் செய்கிறேன். இந்த ஹோமம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாக வேண்டும். 32.) அனைத்தையும் இயக்குவிக்கும் சூரியனும் அனைவரையும் அடிமைகொள்ளும் கோபமும்......

இராத்திரியின் அதிதேவதை நீக்கியருள வேண்டும்... நான் மோக்ஷத்திற்குக் காரணமாகிய சூரியவடிவான பரஞ்ஜோதியில் ஹோமம் செய்கின்றேன். இந்தஹோமம் நன்கு அனுஷ்டிக்கப் பட்டதாகுக. காயத்ரீ ஆவர்ஹன:

35) காயத்ரியே! நீ பிராணசக்தியாகவும், இந்திரியசக்தியாகவும் இருக்கிறாய். சத்துருக்களை வெல்லுந் திறமையாக இருக்கிறாய்; ஞானஒளியாக இருக்கிறாய்; தேவர்களுடைய பிரசித்தமான பிரகாசவடிவாயிருக்கின்றாய்; உலகவடிவ்வாயிருக்கின்றாய்; காலரூபியாக உலகின் ஆயுளா கவும் இருக்கின்றாய்; எல்லாமாயிருக்கின்றாய்; எல்லோ ருடைய ஆயுளாகவும் இருக்கின்றாய். அனைத்தையும் வென்ற வளாயிருக்கின்றாய். பிரணவப் பொருளான காயத்ரியை எழுந் தருளப் பிராத்திக்கிறேன். ஸாவித்ரியை எழுந்தருளப் பிரார்த்திக் கிறேன், ஸரஸ்வதியை எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன். சந்த ரிஷிகளை எழுதருளப் பிராத்திக்கிறேன். (எல்லா தேவதை களின்) சக்தியை எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன். காயத்ரி மந் திரத்தின் சந்தம் காயத்ரி, ரிஷி விசுவாமித்ரர், தேவதை ஸவிதா; முகம் அக்னி, தலை பிரம்மா, இருதயம் விஷ்ணு, சிகை ருத்திரன், யோனி பிருதிவி; மூச்சுக்காற்று பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன்; நிறம் வெண்மை ஞானயோகிகளான ரிஷிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவள். காயத்ரீ மந்திரம் இருபத்திநாலுஎழுத்துக்களையும்,மூன்றுஅடி களையும்,ஆறு கோசங்களையும்,ஐந்துதலைகளையும் உடையது உபநயனத்தில் இதற்கு விநியோகம். ஓங்காரமே பூலோகம், ஓங்காரமே புவர்லோகம்,ஓங்காரமேஸுவர்லோகம்,ஓங்காரமே மஹர்லோகம், ஓங்காரமே ஜனலோகம், ஓங்காரமே தபோலோ கம், ஓங்காரமே ஸத்தியலோகம், ஓங்காரப் பொருளான எந்தப் பரமாத்மா நம்முடைய புத்திசக்திகளை தூண்டுகிறாரோ, அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவானுடைய சிறந்த ஜோதிஸ்வரூபத்தை தியானிப்போம். ஓங்காரமே ஜல மும் ஒளியும்,ரஸம் பொருந்திய அன்னத்தை யளிக்கும் பூமியும் உயிருக்கு ஆதாரமான வாயுவும் எங்கும் பரந்த ஆகசமும்; பூபுவ; ஸுவ: என்ற வியாஹ்ருதிகள் குறிப்பிடும் மனம்,புத்தி, அஹங்காரம் என்ற தத்துவங்களும் ஓங்காரமே.

38.1) த்ரிஸுபர்ண மந்திரா:— பிரம்மம் என்னை வந்து அடையட்டும். பிரமானந்தம் என்னை வந்து அடை யட்டும். பிரம்மமேயாகிய ஆனந்தம் என்னை வந்து அடையட்

டும். 39.1) பிரம்மம் புத்தியின் தாரணா சக்தியால் ஆனந்தம் புத்தியின் தாரணா சக்தியால் பிரம்மமேயாகிய ஆனந்தம் புத்தியின் தாரணா சக்தியால் (அடையப்படுகிறது). 39.2.) எது உயர்ந்த நன்மையோ அதை எனக்குக் கூட்டிவைத்தருளல் வேண்டும். 39.4) எந்தப் பிராமணர்கள் திரிஸுபர்ணத்தை ஓதுகிறார்களோ, அவர்கள் நிச்சயமாக கருவைச் சிதைத்ததாலேற்படும் பாவத்தையும் அழிக்கிறார்கள். அவர்கள் ஸோமயாக பலனை அடைகிறார்கள் போஜன பந்தியிலுள்ள ஆயிரக்கணக்கானவர்களையும் பாவனமாக்குகிறார்கள். ஓம்.40.1,) பிரம்மம் யஜ்ஞுத்துடன் கூடியிருக்கிறது. ஆனந்தம் யஜ்ஞுத்துடன் கூடியிருக்கிறது. பிரம்மம்மாகிய ஆனந்தம் யஜ்ஞுத்துடன் கூடியிருக்கிறது.

மேதாஸுக்தம்—41) எங்கும் செல்லும் சக்தி வாய்ந்தவளும், மங்களஸ்வரூபியும், பிரியமானவளும், கிருபை புரிபவளுமான மேதாதேவீ எழுந்தருளட்டும் தேவியே! உன்னால் அனுக்கிரஹிக்கப்பெற்ற நாங்கள் ஞான ஒளிபெற்று கெட்டவார்த்தைகளை விட்டொழித்து, பரவஸ்துவைப் வீரர் பற்றின சிறந்த வார்த்தைகளை பேசுவோமாக. 44) எனக்கு புத்தி சக்தியையும். பிரஜையையும், பிரம்மதேஜஸையும் அக்கினி அளிக்கட்டும். எனக்கு புத்தி சக்தியையும் பிரஜையையும் இந்திரிய சக்தியையும் இந்திரனும் எனக்குபுத்திசக்தியையும் பிரஜையையும் எதிரிகளை அச்சுறுத்தும் வீரியத்தையும் சூரியனும் அளிக்கட்டும். 50) ஸமித்தினால் அக்கினியை வளர்த்து நான் (இகபரமாகிய). இரண்டு லோகங்களையும் அடைவேனாக, இரண்டு லோகங்களின் செல்வங்களையும் அடைந்து நான் நிச்சயமாகச் சாவை கடந்து செல்வேன். (பொய்யை விட்டு நான் மெய்யை நாடுகிறேன் மனித இயற்கையை விட்டு விட்டு தெய்வத்தன்மையை நாடுகிறேன், தெய்வப் பணிக்கு என் வாக்கை அர்ப்பணம் செய்கிறேன். தைத்திரிய பிரம்மாணம்.)

ம்ருதயுஞ்ஜய மந்திரா:-56.) இயற்கையான நறுமணம்உடையவரும், கருணையால் அடியாரைப் போஷித்து வளர்ப்பவரும் ஆகிய முக்கண்ணனைப் பூஜித்து வழிபடுகின்றோம். வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து விடுபடுவது போல் சாவினுடைய பிடிப்பிலிருந்து விடுபடுவோமாக. மோக்ஷமார்க்கத்திலிருந்து விலகாமலிருப்போமாக. (காயத்ரீ 24 எழுத்து, ஜாதவேதஸேஎன்னும் துர்க்காமந்திரம் 44 எழுத்து, இந்த மந்திரம் 32 எழுத்து ஆக மூன்றும் சேர்ந்து சதாக்ஷரீ எனப்படும் ஸமஸ்கிருதத்தில்) 57) உலகையழிப்பவரே, பிராணிகளைக் கொல்வதற்காக

உம்முடைய ஆயிரக்கணக்காகவும் உள்ள பாசக்கயிறுகள் (கெட்ட எண்ணங்கள், கெட்ட செயல்கள், நோய்கள், விபத்துக்கள், அறியாமை, அஜாக்ரதை) எவைகள் உண்டோ அவைகளனைத்தையும் பூஜையின் பிரபாவத்தால் விலகிப் போகும்படி வேண்டுகிறேன். 58) மிருத்யுவுக்கு இந்த ஆஸுதி நன்கு செய்யப்பட்டதாகட்டும்.

60) வஸுக்களுக்கு:- தேவர்களே! வசுக்களே! நாவினாலோ மனதினாலோ, செயலினாலோ கம்பீரமான மனது படைத்த தேவர்களை அவமதிக்கும் எந்தப் பெரிய பிழையை இழைத்துள்ளோமோ எது எங்களைத் தொடர்ந்து துன்புறுத்துகிறதோ அவ்விஷயத்தில் உங்களை ஸ்வாஹாகாரத்தினால் ஆராதிக்கிறோம். அந்தப் பாவத்தை சகித்துக்கொள்ளவேண்டும்,

61) (எல்லா தேவதைகளுக்கும்) மீண்டும் மீண்டும் நமஸ்காரம். (என்னிடம் நிகழும் பிழையெல்லாம்) காமம் செய்தது. காமம் செய்கிறது, நான் செய்யவில்லை. காமமே செயலாளி, நான் செயலாளி அல்லேன். காமம் செய்விக்கிறது, நான் செய்விப்பவனல்லேன். கமனீயமான வடிவுடன் தோன்றும் காமமே! உனக்கு இந்த ஹோமம் நன்கு செய்யப்பட்டதாகட்டும். (என்னை உன் பிடியிலிருந்து விடுவிப்பாயாக)

விரஜாஹோமம்:–65) என்னுடைய பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் ஆகியவை பரிசுத்தமாகட்டும் வாக்கு, மனது, கண், காது நாக்கு, மூக்கு, ரேதஸ், புத்தி, ஸங்கல்பம் பரிசுத்தமாகட்டும். மேல்தோல், உள்தோல். மாம்ஸம், ரக்தம், கொழுப்பு, ஊன், தசை, எலும்பு பரிசுத்தமாகட்டும், தலை, கை,கால், விலாப்புறம், முதுகு, துடை, வயிறு முழங்கால், குறி, உபஸ்தம், பாயு பரிசுத்தமாகட்டும், 66) என் உடலிலுள்ள ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய ஐம்பூதங்களும் பரிசுத்தமாகட்டும் என உடலிலுள்ள பஞ்சபூத தன் மாத்திரைகள் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம்,கந்தம் பரிசுத்தமாகட்டும். மனது, வாக்கு, காயம் அவற்றின் செயல்கள் பரிசுத்தமாகட்டும். அந்தக்கரணம் பரிசுத்தமாகட்டும். பரமாத்மா என்னிடம் பரிசுத்தமடைந்து விளங்கட்டும். நாம ரூப பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்யும் நோக்கத்துடனிருக்கும் பரமேசுவரனுக்கு ஸ்வாஹா. அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஜ்ஞானமயகோசம், ஆனந்தமய கோசம் பரிசுத்தமாகட்டும். நான் அழுக்கற்றவனாகவும், பாவம் நீங்கியவனாகவும் பரஞ்ஜோதிவடிவினனாகவும் ஆகவேண்டும்

ஸ்வாஹா (ஸந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு முன் செய்வது) 68) ஓங்காரத்தின் பொருளான அது ப்ரம்மம். அதுவே வாயு. (பிராண வடிவான ஸூத்ராத்மா.) அதுவே ஜீவாத்மா. அதுவே பரமார்த்த ஸத்யம். அதுவே எல்லாம். அதுவே (ஸ்தூல ஸூக்ஷ்ம காரண)சரீரம். அப்படிப்பட்ட பிரம்மத்திற்கு நமஸ்காரம். அதுவே பல உருவங்களைத் தாங்கிய பிராணிகளின் இருதய குகையினுள்ளே உறைகிறது.

69.1) ப்ராணஸூதி மந்த்ர:- பிராணனிடத்தில், அபானனிடத்தில், வ்யானனிடத்தில், உதானனிடத்தில், ஸமானனிடத்தில் சிரத்தை வைத்தவனாய் நான் இந்த அமிருதம் போன்ற அன்னத்தை என்னுடைய ஜீவன் பிரம்மத்திடம் கலந்து சாகா நிலையை அடைவதற்காக ஹோமம் செய்கிறேன். நீ கீழ் விரிப்பு ஆவாய். அன்னமே! பசியின் வாட்டம் நீங்கும் பொருட்டு நீ மங்கள வடிவுடன் என்னுள் புகுவாயாக. பிராணனுக்கு ஸ்வாஹா. 71) கட்டை விரல் அளவுள்ள புருஷன், கட்டை விரல் அளவுள்ள இருதய குகையில் உறைபவன், உலகுக்கெல்லாம் ஈசுவரன், பிரபு, அனைத்தையும் உண்பவன். (போஜனமாகிற அக்னிஹோத்ரத்தால்) பிரீதியடையட்டும்.

78.1) ஸத்யம் தான் பரதந்துவம். பரதந்துவம் ஸத்தியமே. ஸத்தியத்தால் ஸ்வர்க்க லோகத்திலிருந்து ஒரு போதும் நழுவாமலிருக்கின்றனர். ஸத்துக்களுடையதாக இருப்பதால் இது ஸத்யம் எனப்படுகிறது. ஆகையால் (உயர்நலத்தை நாடுவோர்) ஸத்தியத்தில் இன்புறுகின்றனர். 1. ஸத்யம் (பரதத்துவம்); 2. தவம் (பரதத்துவம்); 3. தமம் (பரதத்துவம் -புலனடக்கம்); 4. சமம் (மனவடக்கம்); 5. தானம் (தக்ஷிணை) 6. தர்மம் (ஒன்றாகக் கூட்டிவைப்பது); 7. ஸந்தான விருத்தி (பிரஜைகள்); 8. அக்கினிகளின் உபாஸனை; 9. அக்கினி ஹோத்ரம்; 10. யக்ஞம்; 11 மானஸ பூஜை (வித்வான்கள் கருதுவது); 12. ஸூந்நியாஸம் (ஹிரண்ய கர்ப்பர்-பிரம்மா கருதுவது) இவை உயர்நலத்தை நாடுவோர் இவற்றில் இன்புறுகின்றனர் அவர்கள் பரதத்துவத்தை அறிந்தவர்களாகின்றனர். 79. 2.) ஞானஸாதனம்:- 1. ஸத்யம். 2. தவம். 3. புலனடக்கம். 4. மனவடக்கம். 5. தானம். 6. தர்மம். 7. ஸத்ஸந்தான விருத்தி. 8. அக்கினி உபாஸனை, வேத வித்தை. 9. அக்கினி ஹோத்ரம். 10. யக்ஞம். 11. மானஸ பூஜை. 12. ஸந்நியாஸம் 12. காலவடிவான ஆதித்தியன். – பிரம்மம்;–ஆத்மா. ஆகிய இவற்றை சிறந்த ஸாதனமாகக் கூறுகின்றனர். ஸத்தியத்தால் காற்று வீசுகிறது ஸ்த்தியத்தால் சூரியன் வானவெளியில்

பிரகாசிக்கிறான். ஸத்தியம் தான் வாக்குக்கு அடிப்படை. ஸத்தியத்தில்தான் அனைத்தும் நிலை பெறுகிறது. ஸத்தியத்தை சிறந்த சாதனமாக கூறுகிறார்கள் 79.15.) கிரணங்களால் மேகம் மழை பெய்கிறது, அதனால் செடி கொடி மரங்கள் உண்டாகின்றன. அவற்றினின்றும் அன்னம், அன்னத்தால் பிராணன்கள், பிராணன்களால் பலம், பலத்தால் தவம். தவத்தால் சிரத்தை, சிரத்தையால் கூரிய புத்தி, கூரிய புத்தியால் திடமான ஸங்கல்பம். திடமான ஸங்கல்பத்தால் மனத்தெளிவு; மனத்தெளிவால் சாந்தி. சாந்தியால் நிலையான சித்தம், நிலையான சித்தத்தால் உண்மையை மறவாமை, உண்மையை மறவாமையால் அதையே இடை விடாது நினைத்திருத்தல், அப்படிப்பட்ட நினைவால் விஜ்ஞானம், விஜ்ஞானத்தால் ஆத்மாவை ஒருவன் உணர்ந்து அனுபவிக்கிறான். ஆகையால், அன்னத்தையளிப்பதால் ஒருவன் இவையனைத்தையும் அளிக்கிறான். விஜ்ஞானத்தால் ஆனந்தமும் அதனால் உலகின் தோற்றுவாயாகிய பிரம்மமும் அடையப்படுகிறது. 79.18.) ஓங்காரத்தை ஜபித்துக் கொண்டு ஆத்மாவை தியானிக்க வேண்டும். இதுதான் சிறந்த உபநிஷதமும் தேவரஹஸ்யமும். 80.) ஞானயக்ஞம்:- ஆத்மா யஜமானன், சிரத்தை பத்னீ, சரீரம் ஸமித்து மரணம் பூர்த்தி.

—X—X—X—X X—X—X—X—X—X—X—X—X—X—X

உத்தீப்யஸ்வ ஜாதவேதோ அபக்னந் நிர்ருதிம் மம (1.4.4. தை. நா) காத்யாயனாய வித்மஹே கன்யாகுமாரி தீமஹி தந்நோ துர்கி: ப்ரசோதயத் (1.7.3. தைத். நாரா) ஸ்ரீர்மே பஜது. (1.10.4. தை. நா) அஹமஸ்மி ப்ரஹ்மாஹமஸ்மி அஹமேவாஹம் மாம் ஜுஹோமி ஸ்வாஹா (1.15.2. தை. நா.) நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர: (13.1.4. தை. நா) ப்ரஹ்மமேது மாம் மதுமேது மாம் ப்ரஹ்மமேவ மதுமேது மாம் (38.1.) ப்ரஹ்ம மேதாய மது மேதயா ப்ரஹ்ம மேவமது மேதயா (39.1. தை. நா.) யத் பத்ரம் தன்ம ஆஸுவ (39.2. தை. நா.) ப்ரஹ்ம மேதவா மது மேதவா ப்ரஹ்ம மேவ மது மேத்வா (40.1. தை. நா.) த்ர்யம்பகம் யஜாமஹே ஸுகந்த்திம் புஷ்டி வர்த்தனம் உர்வாருகமிவ பந்த்தனான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் (56. தை. நா.) ஸத்யம்—தவம்—தம்ம்— (புலனடக்கம்)—சமம் (மனவடக்கம்) — தானம் (தக்ஷிணை) — தர்ம்ம (கூட்டிவைக்கிறது) — ஸந்தான விருத்தி—அக்னிகளின் உபாஸனை—அக்னி ஹோத்ரம்—யக்ஞம் —மானஸபூஜை — ஸந்நியாசம்; உயர்நலத்தை நாடுவோர் இவற்றில் இன்புறுகின்றனர். (78.1–12. தை. நா.)

ஓம்; என் வாக்கு மனதில் ஊன்றி நிற்கட்டும். மனமும் வாக்கில் ஊன்றி நிற்கட்டும் ஆவியே என்னிடம் பிரகாசித் தருள்வாய் (நீவிர்) என்னிடம் வேதத்து அச்சாணி போன் றிருங்கள் என் கேள்வியை வீணாக்க வேண்டாம். இந்த அத்தியயனத்தில் இரவையும் பகலையும் ஒன்றாக்குவேன். ருதத்தையும் ஸத்தியத்தையும் போற்றுகிறேன். அது என்னை காப்பாற்றட்டும். ஆசாரியனைக் காப்பாற்றட்டும். ஓம் மூவ் வகையிலும் சாந்தி நில்வுக.

1.1.1.) இது ஆத்மா ஒன்றாகவே ஆதியில் இருந்தது; வேறு எதுவும் இல்லை; உலகங்களைச் சிருஷ்டிக்க அது விரும்பியது; அது இவ்வுலகங்களைச் சிருஷ்டித்தது. 1.1.2.) அம்பஸ் ஸ்வர்க்கலோகத்திற்கு மேல்; அதற்கு ஆதாரமாக உள்ளது, ஸ்வர்க்க லோகம்; மரீசீ (கிரணங்கள் நிறைந்த) அந்தரிக்ஷம்; மரம் என்பது பூமி; எது அதற்குக் கீழே உள்ளதோ அது (அப:) ஜலமயமான உலகம். (அம்பஸ், ஸ்வர்க்கம், மரீசி, மரம், அப:) 1.1.3) அது (ஆத்மா) நீரைப் பிரதானமாக உடைய ஐம்பூதங்களினின்றே புருஷனை (பிண்ட வடிவாக) திரட்டி யெடுத்து உருவாக்கிற்று. 1.1.4) ஆத்மா சிந்தித்தது. அச் சிந்தனையால் முட்டை பிளப்பது போல் வாயின் துவாரம் உண்டாயிற்று; வாயிலிருந்து வாக்கு; வாக்கிலிருந்து அக்கினி; பின்பு நாசிகளின் துவாரங்கள் உண்டாயின; நாசி களினின்று பிராணன்; பிராணனிலிருந்து வாயு. கண்களின் துவாரங்கள் உண்டாயின; கண்களிலிருந்து பார்வை; பார் வையிலிருந்து சூரியன். காதுகளின் துவாரங்கள் உண்டாயின. காதுகளிலிருந்து கேள்வி; கேள்வியிலிருந்து திசைகள்; தோலில் துவாரங்கள் உண்டாயிற்று. தோலிலிருந்து உரோமங்கள்; உரோமங்களிலிருந்து செடி கொடிகளும் மரங்களும். இப்படியே இருதயம்—மனது—சந்திரனும்- நாபித்துவாரம்- அபானன்- சாவு: ஆண்குறி துவாரம்—ரேதஸ்—அப்பும் உண்டாயின.

1.2.1.) இந்த தேவதா சக்திகள் இந்தப் பெரிய (ஸம்ஸார) ஸமுத்திரத்தில் வீழ்ந்தன. அந்த ஆதி புருஷனை (ஆத்மா) பசிக்கும் தாகத்துக்கும் உள்ளாக்கினார். தேவதா சக்திகள் ஆத்மாவிடம் எந்த இடத்தில் நிலை பெற்று நாங்கள் அன்னத்தை புசிக்கலாமோ அப்படிப்பட்ட இடத்தை எங்களுக்கு கல்பியுங்கள் என்று கூறின. 1.2.4) அக்கினி வாக்காகி வாயில் புகுந்தது; வாயு பிராணனாகி மூக்கில் புகுந்தது; சூரியன் பார்வையாகிக் கண்ணில் புகுந்தது; திசைகள் கேள்வி

யாகிக் காதில் புகுந்தன; ஒஷதி வனஸ்பதிகள் உரோமங்களாகித் தோலில் புகுந்தன; மிருத்யு அபானனாகி நாபியில் புகுந்தது. 1.2.5) பசியும் தாகமும் எங்களுக்கு ஒரு இடத்தைக் கல்பியுங்கள் என்று அவரிடம் கூறின இந்த தேவதைகளிடம் உங்களுக்கு இடமளித்து இவர்களிடம் பாகமுடையவர்களாக உங்களைச் செய்கிறேன் என்று அவர் அவர்களிடம் கூறினார். ஆகையால் எந்த ஒரு தேவதைக்கு ஹவிஸ் அளிக்கப்பட்டாலும் பசியும் தாகமும் அதில் பங்குடையவர்களாகின்றனர்.

1.3.2.) அவர் அப்புவைச் சிந்திக்க அப்புவிலிருந்து அன்னம் தோன்றிற்று. 1.3.3.) அன்னம் ஓடி மறைய விரும்பிற்று; ஆதிபுருஷன் அன்னத்தை பேசுவதால், முகர்வதால், பார்ப்பதால், கேட்பதால், தொட்டுணர்வதால், நினைப்பதால், குறியில் கழிப்பதால் பிடிக்க திருப்தியடைய முடியவில்லை. 1.3.10) அதை அபானனால் (வாயின் வழியாகப்) பிடிக்க முயன்றான். அது (அன்னம்) பிடிக்கப்பட்டது. இந்த அபான வாயுவின் உயிர்நிலை அன்னம். 1.3.12) அந்த ஆதிபுருஷன் (தலையின் உச்சியாகிய) இந்த எல்லையைப் பிளந்து கொண்டு உள்ளே இந்த வாயிலின் வழியாகப் புகுந்தான். இது ஆனந்தத்தின் உறைவிடம். அப்புருஷனுக்கு உறைவிடம் மூன்று (தந்தையில் உடல், தாயின் உடல், தன் உடல்); உறங்குமிடம் மூன்று (ஜாக்ரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி, மூன்றும் அறிவின் விழிப்பில்லாமல் அஞ்ஞான உறக்கம்: கண், மனது, இருதயம்.)

2.1.) இவன் ஆதியில் புருஷனிடத்தில் (விந்து வடிவான) கர்ப்பமாயிருக்கிறான். இந்த விந்து எல்லா உறுப்புக்களின் சக்தியும் திரண்டு உண்டாகியது. தன்னைப் புருஷன் தன்னிடத்துக் கருவாய்த் தானே தரிக்கிறான். அதை எப்போது ஸ்திரீயிடம் விடுகிறானோ அப்போது தன்னைப் பிறப்பிக்கிறான், முதற் பிறப்பு, 2.2.) அது உடலுக்குச் சொந்தமான ஒரு உறுப்பே போல் அந்த ஸ்தரீயுடன் ஒன்றுபட்டுப் போகின்றது, அவளை துன்புறுத்துவதில்லை. அவள் தன்னிடம் புகுந்த (பார்த்தாவின் ஆத்மாவேயாகிய) ஜீவனைப் பரிபாலிக்கிறாள். 2.3.) பிதா பிறப்புக்கு முன்னாலேயே தனக்குக் குமாரனாய் விட்ட அவனைப் பிறப்புக்கு முன்னும் பின்னும் போற்றுகிறான்; அதனால் பிதா தன்னையே தான் போற்றிக் கொள்கிறான். இவ்வாறே (இன்மையும் மறுமையுமான) உலகங்களின் தொடர்பு (ஸந்ததி) அறுபடாமல் பெருகி வருகிறது, இது இரண்டாவது பிறப்பு, 2.4.) (பிதாவினுடைய) ஆத்மாவேயாகிய இவன் புண்ணிய கருமங்களில் இவ்வுலகில்

(பிதாவுக்கு) பிரதிநிதியாகிறான். ( பிதாவின் உடலிலுள்ள ) அவனுடைய மற்றொரு ஆத்மா வயது சென்றதாய் இங்கு செய்வனவற்றைச் செய்து முடித்ததாய்ப் பிரயாணப்படுகின்றது மீண்டும் (வேற்றுடலில் புகுந்து) பிறப்பையடைகின்றது . அது அவனுடைய மூன்றாவது புறப்பு (அவ்வுலகிற் புகுவது) 2.5.) கர்ப்பத்திலிருந்து கொண்டே நான் தேவஜன்மங்கள் அனைத்தையும் (முன் ஜன்மங்களின் புண்ணிய பாவங்களை) அறிந்தவனானேன். நூற்றுக்கணக்கான இரும்புக் கோட்டைகள் என்னை முன்னம் கீழே காவல் கொண்டன. பருந்துபோல் வேகமாக வெளிக்கிளம்பி விட்டேன். (பிறந்தவுடனேயே விஷ்ணுமாயையின் வாயுவால் தொடப்பட்டதும் பூர்வஜன்மம் புண்ணிய பாவ கர்மங்களை யாவையும் மறந்து விடுகிறான்)

3.1.) எதனால் ஒருவன் உருவத்தைப் பார்க்கிறானோ, ஓசையைக் கேட்கிறானோ, வாசனையை முகர்கிறானோ, வார்த்தையைப் பேசுகிறானோ, இனிப்பையுங் கசப்பையும் உணர்கிறானோ, எதை இதுஆத்மா என்று உபாசிக்கிறோமோ அதுஎவ்வகைத்து? 3.2.)இங்கு இருதயம் எனப்படுவதும், மனம் எனப்படுவதும் அதுவே. உணர்வு (ஸம்ஜ்ஞானம்), ஆட்சி (ஆஜ்ஞானம்), கலைஞானம் (விஜ்ஞானம்), பகுத்தறிவு (ப்ரஜ்ஞானம்), அறிவின் கூர்மை (மேதை), மனக்கண் கொண்டு காணுதல் (திருஷ்டி), மனோதிடம் (த்ருதி), மனன சக்தி (மதி), நிச்சய புத்தி (மனீஷா), மனக்கலக்கம் (ஜூதி), ஞாபகசக்தி [ஸ்ம்ருதி], விருப்பம் (ஸங்கல்பம்), தீர்மானம் (க்ரது), பிராணசக்தி (அஸூ), ஆசை (காமம்), விஷயங்களில் கவர்ச்சி [வசம்],என்ற இவையெல்லாம் ப்ரஜ்ஞானத்தின் [வேவ்வேறு] பெயர்களேயாகின்றன. 3.3.) அசையும் பொருட்களும் எல்லாமும் பகுத்தறிவையையே [பிரஜ்ஞையையே] நேதாவாக உடையன. பகுத்தறிவிலேயே நிலை பெற்றுள்ளன. உலகம் பகுத்தறிவினால் நடத்தப்படுகிறது. பகுத்தறிவில் நிலை பெறுகிறது. பகுத்தறிவே [பிரஜ்ஞானமே] பிரம்மம்.

— — — — — — — — — — — —

[ப்ரணவம்] ஓம்

[வ்யாஹ்ருதி] பூ ர் ப் பு வ ஸ் ஸு வ:

{ காயத்ரீ 24 எழுத்து } த த்ஸ வி து ர்வ ரே ணி யம் ப ர்கோ தே வ ஸ்ய தீ ம ஹி தி யோ யோ ந: ப்ர சோ த யாத்

ஜாதவேதஸே ஸுநவாம ஸோம மராதீயதோ நிஷஹாதி வேத: ஸந பர்ஷததி துர்காணி விச்வா நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி:

சாந்தி பாடம் - அஸந்தினின்று என்னை ஸத்துக்கு அழைத்துச்செல் இருளினின்று என்னை ஒளிக்கு அழைத்துச் செல். சாவினின்று என்னைச் சாகாமைக்கு அழைத்துச் செல். ஓம் மூவ்வகையிலும் சாந்தி நிலவுக.

1.1.2.] பூதங்களின் [சிறப்பான பகுதி] ரஸம் மண்; மண்ணின் ரஸம் தண்ணீர்; தண்ணீரின் ரஸம் தாவர வர்க்கம்; தாவரங்களின் ரஸம் மனிதன்; மனிதனின் ரஸம் வாக்கு; வாக்கின் ரஸம் ருக்; ருக்கின் ரஸம் ஸாமம்; ஸாமத்தின் ரஸம் உத்கீதம். [ஓங்காரம் ஓம்] 1.1.10] தத்துவ ஞானத்துடனும் சிரத்தையுடனும், யோக முறைப்படியும் எது செய்யப் படுகிறதோ அதுவே மிகுந்த வீரியமுடையதாகும் என்பது தெளிவு. [மருந்தைச் சாப்பிடும் அளவும் முறையும் அறியாத நோயாளி முழுப்பலனை அடையாமற் போகலாம். ஒருவேளை முறை தவறி உபயோகித்துக் கெடுதியையும் அடையலாம். மந்திரமும் மருந்தைப் போலவே முறைப்படி கையாள்க] 1.2.4.] சப்த, ரூப, ரஸ, கந்த, ஸ்பர்ச விஷயங்களும் மனமும் அசுரர்களால் கெடுக்கப்பட்டதாயிற்று. கற்பாறையில் மோதின மண்ணாங்கட்டி போல் அசுரர்கள் முக்கியப் பிராணனுடன் மோதி சிதறிப்போயினர். முக்கியப் பிராணனை உபாசிக்கும் அறிந்தவனை பாவம் அனுகாது இந்த இரகசியத்தால் சிதறுண்டுபோம். 1.9.4.] ஆகாசத்தினின்றே எல்லாப் பொருள் களும் உண்டாகின்றன. முடியும் போது ஆகாசத்திலேயே புகுகின்றன. ஆகாசமே உலகுக்கெல்லாம் பெரியது, முடிவான உறைவிடம் [அங்கிங்கெனாதபடி எங்கும்பிரகாசமாய் இருக்கும் ஆகாசம் பிரம்மமே] 1.10.2.] கொள்ளைத் தின்று கொண்டிருந்த ஒரு யானைப் பாகனை பார்த்து இடியினால் நாசமடைந்த வடிவந்தாங்கிய அவர் பிச்சை கேட்டார். அவன் தின்று மிகுந்த இதைத் தவிர வேறு ஒன்றும் இல்லையே என்றான். 1.10.3.] அதை எனக்குக் கொடு என்றார்; அதை இவருக்குக் கொடுத்து இந்தாரும் குடிக்க நீரும் என்றான். [அதை ஏற்றுக் கொண்டால்] உச்சிஷ்டத்தை உண்டவனாவேன் என்று மறுத்தார். 1.10.4.] இந்த கொள் மட்டும் உச்சிஷ்டமன்றோ என்றான். அதை உண்ணாவிடில் என் உயிர் நிலைக்காது. குடி நீரேவெனில் காம மாகும் என்றார். [இது ஆபத் தர்மம் உயிருக்கு ஆபத்தில் ஆசாரத்தை மீறலாம்] மற்ற சமயமன்று

2.23.1.] தர்மத்தின் பிரிவினை [ஸ்கந்தங்கள்] மூன்று யக்ஞம், அத்தியயனம், தானம். இது [கிருஹஸ்தாசிரமம்]

முதல் பிரிவு. தவமே (வானப் பிரஸ்தம்) இரண்டாவது; ஆசாரிய குலத்தில் ஆயுள் முடியத் தன்னையடைக்கி வாழும் பிரம்மச்சாரியின் தர்மம் மூன்றாவது. இவர்கள் எல்லோரும் புண்ணியலோகங்களை யடைவதற்க் குறியவர்களாகிறார்கள். பிரம்ம ஞானியோவெனின் அழியாத ஆத்ம நிலையை எய்துகிறான், (யஜ்யம், அத்தியயனம், தானம், தவம், ஸத்யம், பொறுமை, தளராமை, லோபமின்மை என தர்மம் எட்டு. மனிதன் கடமை பூர்த்தி—யஜ்யம், தானம், தவம்) 2.23.3.) இலைகலெல்லாம் நரம்பினால் நன்கு ஊடுருவி வியாபிக்கப் பட்டிருப்பது போல் வார்த்தைகளெல்லாம் ஓங்காரத்தினால் ஊடுருவி வியாபிக்கப்பட்டிருக்கிறது.

3.1.1.) ஓம் இந்த ஆதித்யன் தேவர்களுக்கு அமிர்தம் (மது). சூரியன் எல்லா இந்திரியங்களுக்கும் அவற்றின் அதிஷ்டானமான தேவர்களுக்கும் களிப்பூட்டுகிறான். 3.11.3.) இந்த பிரம்மஞானத்தை யறிந்தவன் எவனோ அவனுக்குச் சூரியன் உதிப்பதுமில்லை அஸ்தமிப்பதுமில்லை எப்போதும் குளிர்ந்த ஒரே பகலாகவே இருக்கும் 3.11.5.)மூத்தபிள்ளைக்கு உபதேசிக்கலாம் அல்லது தகுதியுள்ள மானாக்கனுக்கு. 3.12.6.) உண்டாயதாக இங்கு எதெது உண்டோ அது எல்லாம் காயத்ரியே. வாக்கே காயத்ரீ. உண்டாய அனைத்தும் அவனுடைய கால் பங்கு. அவனுடைய முக்கால் பங்கு (ஆத்ம) ஜோதியில் (அழிவற்ற) அம்ருதமாயுள்ளது. (மூலாதாரத்தில் பராவடிவம் உடலில் உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை வியாபித்து உயிரை இயக்குவது; ஸ்வாதிஷ்டானத்தில் பச்யந்தீ வயிற்றில் ஜாடராக்கினியாக இருந்து ஆகாரத்தை ஜீரணம் செய்து உயிரை போஷிப்பது; அனாகதத்தில் மத்யமா உள்ளந்தினுள்ளே ஞானச்சுடராய் விளங்குவது; விசுக்தி அல்லது கண்ட ஸ்தானத்தில் வைகரீ, வாக்கு. கடைசியான வாக்கு மட்டும் தான் நமக்கு விவகாரத்தில் விளங்குவது. மற்ற மூன்று பாதங்களும் உள்ளே மறைந்து கிடக்கின்றன. ஸத், சித், ஆனந்தம் மூன்று பாதங்கள்.) 3.16.1.) புருஷ வாழ்க்கை ஒரு யஜ்ஞம். (முதல்) இருபத்துநான்கு வருஷங்கள் 24 அக்ஷரங்களையுடைய காயத்ரீயுடன் சம்பந்த முடையது அனுகுணமான தேவதைவசுக்கள். பிராணசக்திகளே வசுக்கள். 3.16,2.) அதற்கு மேல் 44 வருஷங்கள் வரை நடுப்பகற்சவனம்; திருஷ்டுப்புடன் சம்பந்த முடையது, 44 அக்ஷரங்களை யுடையது. அனுகுணமான தேவதைகள் ருத்திரர்கள். பிராண சக்திகளே ருத்திரர்கள். இவை அழச் செய்கின்றன, 3.16.5.) அதற்குமேல் 48 வருஷங்கள் வரை மாலைச்சவனம். ஜகதீ

யுடன் சம்பந்தமுடையது. 48 அக்ஷரங்களையுடையது. அனு குணமான தேவதைகள் ஆதித்தியர்கள். பிராண சக்திகளே ஆதித்தியர்கள் இவை உயிர்களை கவர்ந்து கொள்கின்றன.

4.2.2.) ஐயனே தாங்கள் எந்த தேவதையை உபாசிக்கிறீர்களோ அந்த தேவதையை எனக்கு உபாசித்தருளப் பிரார்த்திக்கின்றேன். 4.2.3.) அடே சூத்ரா, பசுக்கள் உள்பட இவையெல்லாம் உன்னிடமே இருக்கட்டும் என்று பதிலளித்தார். பின் அரச கன்னிகையாகிய அவளை முன்னிட்டு இவற்றை ஏற்றுக் கொண்டு, சூத்ரா, இவளை முன்னிட்டு என்னைப் பேசச் செய்து விட்டாய் என்று கூறி உபதேசித்தார் (ஞானிகளுடைய பெருமையையும் செயலையும் ஆழங்காண்பது கடினம், விசித்திரமானது) 4.3.1.) வாயுவே ஸம்வர்க்கம். எப்போது தீ அணைகிறதோ அப்போது அது (தீ) வாயுவில் ஒடுங்குகிறது. எப்போது சூரியன் அஸ்தமிக்கிறதோ அப்போது வாயுவில் (அதன் ஒளி) ஒடுங்குகிறது. எப்போது சந்திரன் அஸ்தமிக்கிறதோ அப்போது (அதன் ஒளி) வாயுவில் ஒடுங்குகிறது. 4.3.2.) எப்போது நீர் சுண்டிப் போகிறதோ அப்போது வாயுவில் நீர் ஒடுங்குகிறது. வாயுவே இவைகளை எல்லாம் இழுக்கிறது. இங்ஙனம் அதிதைய்வம். 4.3.3.) பிராணனே ஸம்வர்க்கம் (அனைத்தையும் இழுத்துக் கொள்ளும் குணமுடையது) தூங்கும் போது வாக்குப் பிராணனிலேயே ஒடுங்குகிறது; பிராணனிலேயே பார்வையும் பிராணனிலேயே கேள்வியும், பிராணனிலேயே மனதும் பிராணனே இவைகளை எல்லாம் இழுக்கிறது. இங்ஙனம் அத்யாத்மம். 4.3.4.) பஞ்சபூதங்களிடை வாயுவாகவும், பஞ்சேந்திரியங்களின் இயக்கத்தில் முக்கியப் பிராணனாகவும் உள்ள இவ்விரண்டுமே ஸம்வர்க்கங்கள். (அனைத்தையும் இழுத்துக்கொள்ளும் குணமுடையது)

4.4.4.) என் யௌவனத்தில் பலவிதமான பணிகளில் ஈடுபட்டிருந்தபோது உன்னைப் பெற்றேன். நீ என்ன கோத்திரம் என்ற அதை நான் அறியவில்லை. என் பெயர் ஜபாலா; உன் பெயர் ஸத்தியகாமன்: என்று என் தாய் கூறினாள். ஆகையால் நான் சத்தியகாம ஜபாலன் ஐயனே என்றான். 4.4.5.) இங்ஙனம் தெளிவுபடக் கூறுபவனைப் பிராமணனல்ல என்று சொல்வது தகுதியன்று. உனக்கு உபநயனம் செய்விக்கிறேன். நீ ஸத்தியத்தினின்று விலகவில்லை, என்றார். அவனுக்கு இளைத்தும் பலங்குன்றியும் இருந்த 400 பசுக்களை கொடுத்து மேய்க்கச் சொன்னார்: ஆயிரமாகாமல் திரும்பேன் என பல வருஷங்கள் (முழுமனதுடன்) வெளியே வசித்தவனா

யினான். 4.9.3.) தேவரீரைப் போன்றவர்களிடமிருந்து நான் கேட்டுள்ளதாவது—ஆசாரியனிடமிருந்து அறிந்த வித்தையே சிறந்த பயன் தருவதாகும் என்பதே. (அவன் ஏற்கனவே தேவதைகளின் கடாக்ஷத்தால் உணர்ந்திருந்த) அதே வித்தையை கொஞ்சம் கூட விடாமல் (மீண்டும்) உபதேசித்தார். 4.10.5.) எது (விஷயசுகம்) 'க'—வால் குறிக்கப்படுமோ அதுவே 'க்க' (இருதயத்திலுள்ள ஆகாசம்; எது 'க்க' வால் குறிக்கப்படுமோ அதுவே 'க', என்று இங்ஙனம் பிராணனைப் பற்றியும் இருதய ஆகாசத்தைப் பற்றியும் அக்கினிகள் உபதேசித்தன. இவை ஆன்ம சுகமும் ஆனந்தமயமான சிதாகாசமும் ஆம். சூரியனிலும், சந்திரனிலும், மின்னலினும் உபாசனையை உபதேசித்து அடங்கின. 4.14.3.) அக்கினிகள் உபதேசித்தவை உலகங்களைப்பற்றியே கூறியிருக்கின்றன. எந்த ஞானத்தை உணர்ந்தவனிடம் பாவச் செயல் ஒட்டாதோ அதை உபதேசிக்கிறார். 4.15.1.) கண்ணினுள் (ஒளியாகவும் ஸாக்ஷியாகவும்) எந்தப் புருஷன் விளங்குகிறானோ அவனே ஆத்மா. அவ்வாத்மா மரணமற்றது (அதனால்) பயமற்றது. அதுவே பிரம்மம். கண்ணினுள் நெய்யையோ நீரையோ விட்டால் வழிந்து விடுகிறது. 4.15.5.) அவர்கள் ஒளி நிறைந்த கதியையே (கிரமமுக்தி) யடைகிறார்கள். ஒரு அமானுஷ்யமான புருஷன் பிரம்மத்திடஞ் சேர்ப்பிக்கிறான். பிரம்மமார்க்கம் இவ்வழியடைத்தவர் மனுவின் சிருஷ்டியாந்ய சூழலில் மீண்டும் வருவதில்லை. இது தேவ, பிரம்ம மார்க்கம்.

5.2.2.) எனக்கு எது ஆடை என்று மூத்ததுஞ் சிறந்ததுமான அந்தப் பிராணன் கேட்டது. தண்ணீர் என்று இந்திரிய சக்திகள் பதிலளித்தன. ஆகையால் சாப்பிடுவதற்கு முன்னும் பின்னும் (அன்னரூபியான பிராணனை) ஆடையால் மூடுவதுபோல் தண்ணீரால் மூடுகின்றனர். அதனால் பிராணன் ஆடையுடையது போலவும் ஆடைக்குறைவு நீங்கியது போலவும் ஆகிறது. 5.2.3.) இதைக் காய்ந்துபோன கட்டையிடம் கூறினாலும் கிளைகள் இலைகள் தளிர்க்கும். 5 3.2.) இறந்த பின் எங்கு செல்கின்றனர். எங்ஙனம் மீண்டும் திரும்புகின்றனர். தேவயாயனம், பித்ருயாயனம் என்ற இம்மார்க்கங்களின் பிரிவு எங்கு? 5.10 1 ) எவர்கள் ஞானத்தை அறிந்தவர்களோ, எவர்கள் அரணியத்தில் சிரத்தையையும் தவத்தையும் கைக்கொண்டவர்களோ அவர்கள்(தேவயானம் என்ற) ஒளிநிறைந்த மார்க்கத்தை அடைகிறார்கள். 5.10.3.) ஆனால் எவர்கள் கிராமத்தில் வசிப்பவர்களாயும் இஷ்டிகளையும்

பொது நலன்களையும் தானத்தையும் (குறுகிய முறையில்) அனுஷ்டிப்பவர்களோ அவர்கள் (பித்ருயாணம் என்ற) ஒளி குன்றிய மார்க்கத்தை அடைகிறார்கள். 5.10.7.) இங்கு நல்வழியில் நடந்தவர்கள் (சந்திரமண்டலத்தினின்று திரும்பி) சீக்கிரமே நற்பிறப்பை யடைகின்றனர்—பிராம்மணராகவோ, க்ஷத்திரியராகவோ, வைசியராகவோ; இங்கு தீயவழியில் நடந்தவர்கள் சீக்கிரமே தீய பிறப்பை யடைகிறார்கள்—சண்டாளராகவோ, நாயாகவோ, பன்றியாகவோ, 5.10.8.) அற்ப ஜந்துக்கள் இவ்விரண்டு மார்க்கங்களிலும் செல்லுபவையல்ல மீண்டும் மீண்டும் இங்கேயே பிறப்பதும் இறப்பதுமாய்ச் சுழல்கின்றன.

5.10.10.) (ஜீவன் மேலுலகங்களில் சஞ்சரித்துவிட்டுத் திரும்பி வரும்போது முதலில் ஆகாயமாகிற அக்கினியில் ஹோமம் செய்யப்படுகிறான். இரண்டாவதாக மழையுடன் கரக்கின்றான், இது இரண்டாவது ஆஹுதி. மூன்றாவதாக மழையால் பூமியில் ஹோமம் செய்யப்பட்டு செடிகொடிகளுடன் கரக்கின்றான். நான்காவதாகப் புருஷனுடைய ஜாடராக்கினியில் ஹோமம் செய்யப்பட்டு நாளடைவில் அவன் வீரியத்துடன் கலக்கின்றான். ஐந்தாவதாக ஸ்திரியின் கருக்குழியிலுள்ள தீயில் ஹோமம் செய்யப்பட்டு உடல் தரிக்கிறான்) எவன் இந்த பஞ்சாக்கினி வித்தையை அறிந்தவனோ அவன் பாவிகளுடன் கூடியிருப்பினும் பாவத்தால் பற்றப்படான், சுத்தனாய் மனத்தூய்மை பெற்றவனாய் புண்ணியனாவான். 5.18.2.) இந்த வைசுவானர ஆத்மாவின் தலை (தேவலோகம்) ஸுதேஜஸ்; கண் (சூரியன்) விசுவரூபன்; மூச்சு (வாயு) பிருதக்வர்த்மா; உடல் (ஆகாசம்) பஹுளம்; மூத்திரகோசம் (ஜலம்) ரயி; பாதங்கள் (பிரதிஷ்டை) பிருதிவி; மார்பு யாகமேடை; உரோமமே தர்ப்பை; இருதயம் கார்ஹபத்யாக்னி; மனம் தக்ஷிணாக்கினி; வாய் ஆஹவனீயாக்னீ. 5.19.1.) முதலில் எந்த அன்னம் வருகிறதோ அது ஹோமம்செய்தற்குரியது. முதல் ஆஹுதியைச் செய்யும் போது அதை ப்ராணாய ஸ்வாஹா (அபானாய ஸ்வாஹா, வ்யானாய ஸ்வாஹா, உதானாய ஸ்வாஹா, ஸமானாய ஸ்வாஹா) என்று செய்ய வேண்டும். அதனால் பிராணன் திருப்தியடைகிறது. அதனால் பிராணன், கண், சூரியன், தேவலோகம், கீழே உள்ளதெல்லாம் திருப்தியடைகிறது.

6.1.3.) எதனால் கேள்விக் கெட்டாத்து கேட்கப்பட்டதாயும், நினைவுக் கெட்டாத்து நினைக்கப்பட்டதாயும்,

அறிவுக் கெட்டாதது அறியப்பட்டதாயும் ஆகுமோ அந்த உபதேசத்தைக் குருவினிடம் கேட்டாயா? 6.1.4.) குழந்தாய் எங ஙனம் ஒரு மண்கட்டியினால் மண்ணாலாகிய அனைத்தும் அறியப்பட்டதாகுமோ, வேறுபாடெல்லாம் பேசுமிடத்துப் பெயரள் விலேயாமோ,மண் ஒன்றே உண்மையோ அங்ஙனம். 6.2.2.) அஸத்திலிருந்து ஸத் எப்படி உண்டாகும். இது ஸத்தாகவே தான் சிருஷ்டிக்கு முன் இருந்தது, ஒன்றாக, இரண்டற்றதாக.

6.2.3.) நான் பலவாக ஆவேன், வெகுவாக வளர்வேன் என்று கண்டு அது ஒளியைச் சிருஷ்டித்தது. அதே பிரகாரம் ஒளி நீரை சிருஷ்டித்தது அதே பிரகாரம் நீர் அன்னத்தைச் சிருஷ்டித்தது. நீரிலிருந்தே உணவு. 6.5.1.) உண்ட உணவு மூன்று விதமாகிறது. அதன் ஸ்தூல பாகம் மலமாகவும், எது நடுத்தரமோ அது மாம்ஸமாகவும், எது ஸூக்ஷ்ம பாகமோ அது மனமாகவும் ஆகிறது. 6.5.4.) மனம் அன்ன மயமானது. பிராணன் நீர் மயமானது. வாக்கு ஒளிமயமானது. 6.8.2.) மனம் திசைகள் தோறும் பறந்தும் வேறெங்கும் உறைவிடம் காணாமல் பிராணனிடமே நிலை பெறும். மனத்திற்கு உறை விடம் பிராணன் என்று உணர்க, 6.9.2.) (ஆழ்ந்த தூக்கத்தில்) ஸத்தை அடைந்துள்ளோம் என்று அறிய மாட்டார்கள். 6.9.3.) (தூக்கத்தில்) எப்படி இருக்கின்றனவோ அப்படியே (தூக்கத்தின் பின்னும்) மீண்டும் ஆகின்றன.

6.9.4.) எது அணுமாத்திரமான ஸூக்ஷ்ம வஸ்துவோ அதையே ஆத்மாவாய்க் கொண்டது இது எல்லாம்; அதுவே ஸத்யம் அதுவே நீயாக உள்ளாய் (தத்-த்வம்-அஸி) 6.10.1.) இந்நதிகள் ஸமுத்திரத்திலிருந்து (தோன்றி) ஸமுத்திரத்தி லேயே மறைகின்றன. இப்பிராணிகளெல்லாம் ஸத்திலிருந்து தோன்றினோம் என்று உணரவில்லை. 6.12.3.) ஆலமரத்தின் ஆலம்பழம் அணுவடிவான விதைகளில் ஒன்று பிளக்கப்பட, அங்கு எந்த ஸூக்ஷ்மப் பொருளை நீ காணவில்லையோ, அந்த ஸூக்ஷ்மப் பொருளினின்றே அந்தப் பெரிய ஆலமரம் உண்டாகி நிற்கிறது அதில் ச்ரத்தைவைப்பாய்(ஜீவசக்தியான) அந்த ஸூக்ஷ்ம வஸ்துவே நீயாக உளாய். 6.13.1.) உப்பை நீரில் போட்டுவைக்க, பிறகு சோதிக்ககாணவில்லை, கரைந்து போயிற்று. 6.13.2.) மேல் நீர், நடு நீர். அடி நீர் தனித் தனியே உண்டுபார்க்க உப்பாயிருக்கிறது. அதைக் கொட்டி விடவும். அப்போதும் இப்போதும் அது இருக்கவே இருக்கிறது (தத்-த்வம்-அஸி) 6.14.2.) ஆசாரியனைப் பெற்ற புருஷன்

ஞானோதயம் பெறுகிறான். (பிராரப்தம் நசித்து) விடுதலை யடையும் வரைதான் தாமதம் அதன் மேல் பிரம்மத்துடன் ஒன்றுபடுகிறான்.

7.1.2.) ருக், யஜுர், ஸாம, அதர்வனவேதங்கள், இதிஹாஸ புராணங்கள், இலக்கணம், பிதிருகல்பம், கணித சாஸ்திரம், சகுண சாஸ்திரம், கால நிர்ணயம், தர்க்க சாஸ் திரம், நீதி சாஸ்திரம், நிருக்தம், சிக்ஷை, பூதவித்தை, போர் முறை, வான சாஸ்திரம், ஸர்ப்ப வித்தை, கந்தர்வ வித்தை, இவற்றை நாரதர் கற்றுள்ளார். 7.2.1.) மந்திரங்கள்; வாக்கு; மனது; ஸங்கல்பம்; சித்தம், தியானம்; விஜ்ஞானம்; ஆத்ம பலம், சிரத்தை, சுகம் ஒன்றுக்கொன்று பெரியது அறியவும். 7.19.1.) எப்போது சிரத்தை ஏற்படுமோ அப்போதே சிந்திப் பான். 7.22.1.) சுகம் காணாமல் சிரத்தையுடன் கருமம் செய் யான். 7.26.2.) தன்னைத்தானே ஆள்பவன் சாவைக்காணான் நோயைக் காணான், துக்கத்தைக் காணான், எல்லாவற்றானும் அனைத்தையும் அடைவான். ஆஹாரம் சுத்தமானால் அந்தக் காரணம் சுத்தமாகும். அந்தக்காரணம் சுத்தமானால் கடவுளின் நினைவு நிலை பெறும். நினைவு நிலை பெற்றால் எல்லாக் கட்டுகளும் தளர்ந்து போம். கலக்கம் நீங்கிய பின் இருள் கடந்த நிலை ஸநத்குமாரர் (ஸ்கந்தர்) காட்டியருள்வார்.

8.13.) இவ்வாகாசம் எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது இருதயத்திலுள்ள ஆகாசமும்; வானுலகும் பூ உலகும் இதனுள் அடங்கும். அக்கினியும், வாயுவும், சூரியனும், சந்தி ரனும், மின்னலும், நக்ஷத்திரங்களும் இன்னும் எதெது இவனுக்கு உண்டோ எதெது இல்லையோ அது எல்லாம் இதனுள்ளடங்கும். 8.1.6.) எவ்வண்ணம் இங்கு கர்மத்தின் பயனாய் அடையப்பட்ட உலகம் அழிவுள்ளதோ அவ்வண் ணமே அங்கு புண்ணியத்தின் பயனாய் அடையப் பெற்ற உலகம் அழிவுள்ளது. எவர்கள் இங்கு ஆத்மாவையும் ஸத்தி யமான ஆசைகளையும் அறியாமல் சென்று விடுகிறார்களோ அவர்களுக்கு எல்லா உலகங்களிலும் அடிமைத்தனம் ஏற்படு கிறது. ஆனால் எவர்கள் இங்கு ஆத்மாவையும் ஸத்தியமான ஆசைகளையும் அறிந்து கொள்கிறார்களோ அவர்களுக்கு எங்கும் சுதந்திரம் ஏற்படுகிறது. 8.3.2.) பொற்குவியல் புதைத்து வைக்கப்பட்ட இடத்தின் மேல் அடிக்கடி நடமாடு பவர்களாயினும் அறியாதவர்கள் அதை கண்டுகொள்ள மாட் டார்களோ அங்ஙனம் இம்மக்கள் அனைவரும் நாள்தோறும் இந்தப் பிரம்மலோகத்திற்குச் செல்லுபவர்களாயிருந்தும்

அதைக் கண்டு கொள்வதில்லை, பொய்மையால் கவர்ந்து கவரப்பட்டவர்களாதலால். (மார்பகத்தின் வலது பக்கத்தி லிருந்து ஸஹஸ்ராரத்திற்டு ஒளிபாயும்) 8.8.4.) ஆத்மாவையே பெருமைபடுத்த வேண்டும். ஆத்மாவை பெருமைபடுத்தி உப சரித்தலால் இகபரமாகிய இரண்டு உலகங்களையும் ஒருவன் அடையலாம். (அசுரர்கள் பிரேத சரீரத்தை அன்னத்தாலும் ஆடையாலும் ஆபரணங்களாலும் மேன்மைப் படுத்துகின்றனர் ஜயிக்கவேண்டியவை ஜயித்து விட்டதாக கருதுகின்றனர். இந்திரன் பயத்தைக் கண்டான். தேகம் முடமானால் இதுவும் முடமாயும் தேகம் நாசமானால் இது நாசமாயும் போகுமன்றோ; இதில் நான் ஒரு இன்பத்தையும் காணவில்லை என்று மீண்டும் வந்து சேர்ந்தான். அவரவாகள் தீர்மானம் அவரவர்கள் புத்தி யின் பரிபக்குவத்திற்கு தகுந்தவாறு இருந்தது) 8.10.1–4.) எவன் ஸ்வப்னத்தில் பெருமைப்படுத்தப்பட்டவனாய்ச் சஞ்சரிக் கின்றானோ அவன் தான் ஆத்மா. இதுவும் (ஸ்வப்பனமும்) இன்பமில்லை. 8.11.1 ) ஸுஷுப்தியில் பரம சாந்தனாக எவன் தூங்குகிறானோ, கனவு காண்பதில்லையோ அவனே ஆத்மா, ஸுப்தியில் நாசமடைந்தவன் போல் இருக்கிறான் இதிலும் (ஸுஷுப்தியிலும்) இன்பத்தைக்காணவில்லை.

8.12.1 ) இந்திரா இச்சரீரம் சாவுடையது. சாவினால் பீடிக்கப்பட்டது. சாவில்லாததும் சரீரமில்லாததுமான ஆத்மா வுக்கு இது இருப்பிடம். சரீரத்துடன் கூடிய இவன் வெறுப்பு விருப்பால் பீடிக்கப்படுகிறான். சரீரத்துடன் கூடிய இவனுக்கு (ராகம் துவேஷம்) விருப்பு வெறுப்பினின்று விடுதலை இல்லவே இல்லை. ஆனால் சரீரம் இல்லாதவனை விருப்பு வெறுப்புகள் தொடமாட்டா. (சூரியனைக் கண்ட ஜலம் உருவமற்றதாகி மேல் நோக்கிச் செல்லுவதைப் போல் ஜீவாத்மாவும் பரஞ் ஜோதியின் ஒளிபட்டதும் கிளம்பி பரஞ்ஜோதியுடன் ஆனந்த நிலையடையும்) 8 12.2–3.) காற்றுக்கு சரீரமில்லை; மேகமும் மின்னலும் இடியும் சரீரமில்லாதவை; எங்ஙனம் இவை ஆகா யத்துக்கு மேலே கிளம்பி உயர்ந்த ஒளியை அடைந்து தமது சுய உருவத்துடன் விளங்குகின்றனவோ அங்ஙனமே தெளி வடைந்த இவன் இச்சரீரத்தினின்று கிளம்பி பரஞ்ஜோதியை யடைந்து சுய உருவத்துடன் விளங்குகிறான். அவன் உத்தம புருஷன். அவன் அங்கே ஸ்திரீகளுடனும் வாகனங்களுடனும் உறவினர்களுடனும் கூடிச் சிரித்தும் விளையாடியும் மகிழ்ந்தும் உடன் பிறந்த சரீரத்தை நினையாமல் உலவுகின்றனர். வண்டியில் குதிரை பூட்டப்பட்டது போல் இச்சரீரத்தில்

பிராணன் பூட்டப்பட்டிருக்கிறது. 8.12.5.) இதை நான் நினைக்கிறேன் என்று எவன் உணர்கிறானோ அவன் ஆத்மா; மனது அவனுடைய தெய்வக்கண். இந்த தெய்வக் கண்ணாகிய மனதாலன்றோ அவன் விரும்பியவற்றைக் கண்டு களிக்கின்றான். (பஞ்சபூத இந்திரியங்கள் எல்லாம் நிகழ்கால உணர்ச்சிகளை மட்டும் உடையன;ஆகையால் அவை தெய்வீக சக்தி வாய்ந்தன அன்று; மனதோ (அந்தக்கரணம்) முக்காலத்தையும் உணர்வது, ஸூக்ஷ்மமானதையும், தூரத்திலுள்ளதையும் அறியக்கூடியது. கண்ணுக்கு கண்ணாயிருப்பது; ஆகையால் மனம் தெய்வக்கண். இந்த தெய்வக்கண்ணாகிய மனத்தாலன்றோ விரும்பியதைக் கண்டுகளிக்கின்றான். (8.12.6.) பிரம்மலோகத்தில் காணக்கிடைக்கும் பெருமைக்கும் பெருமை நானே. (பிராம்மணனுடைய ஞானமும்; க்ஷத்திரியனுடைய வீரியமும், வைசியனுடைய செல்வமும் நானே)

8.14.1.) இரத்த வர்ணமானதும் பல்லில்லாமல் பக்ஷிப்பதும் வழுக்கிவிழச் செய்வதுமான ஸ்தானத்தை (யோனியை) நான் இனி ஒருக்காலும் அடையாமலிருப்பேனாக. (8.15.1.) எல்லா இந்திரியங்களையும் ஆத்மாவினிடத்தில் நிலைபெறச் செய்தவனாயும், விதிக்கப்பட்ட கர்மங்களிலன்றி மற்ற எல்லாவிடத்திலும் எல்லாப் பிராணிகளிடத்தும் அஹிம்ஸையைப் பாராட்டுபவனாகவும், ஆயுள் முழுவதும் உள்ளவன் எவனோ அவன் பிரம்மலோகத்தை அடைகிறான். மீண்டும் திரும்பி வருவதில்லை. (வாழ்வாங்கு வாழும் கிருஹஸ்தனும் உலகத்தைத் துறந்துவாழும் உத்தம ஞானிகள் எய்தும் உயர்ந்த பதவியை அடைவான் என்பதில் ஐயமில்லை)

---

த்ர்யம்பகம் , யஜாமஹே ஸூகந்த்திம் புஷ்டி வர்த்தனம் உர்வாருகமிவ பந்த்தனான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத். ம்ருத்யுஞ்ஜய)தைத்நார56)(காயத்ரீ 24, துர்க்கா ஸூத்தம்44, ம்ருத்யுஞ்ஜய 32 மூன்றும் சேர்ந்து 100-சதாக்ஷரீ என்பபடும்.

தனுர்-க்ருஹீத்-வௌபநிஷதம் மஹாஸ்த்ரம் சாம்-ஹ்யுபாஸா -நிசிதம் ஸந்தயீத | ஆயம்ய தத்பாவ- கதேன சேதஸா லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி (மு. 2.2.3)

யச்-ச்சந்தஸாம்-ருஷபோ விஸ்வரூப: சந்தோப்ப்யோ அந்த்யம் ருதாத்-ஸம்பபூவ ஸமேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது அம்ருதஸ்ய தேவ தாராணோ பூயாஸம் (தைத். சீக்ஷா. 4.1.)

# 10 ப்ருஹதாரண்யகோபநிஷத்

*சாந்தி பாடம் : ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவா வஸிஷ்யதே. ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!*
**ஓம் அது பூர்ணம். இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதயமாயுள்ளது. பூர்ணத்தினின்று பூர்ணத்தை யெடுத்தும் பூர்ணமே மிஞ்சி நிற்கின்றது. ஓம் மூவ்வகையிலும் சாந்தி நிலவுக.**

1.3.28) என்னை ஸத்துக்கு அழைத்துச்செல். இருளி னின்று என்னை ஒளிக்கு அழைத்துச்செல். சாவினின்று என்னைச் சாகாமைக்கு அழைத்துச்செல். 1.4.3.) அவ்விராட் புருஷன் பெண்ணும் ஆணும் இறுகத் தழுவியது போன்ற உருவினனாயினன். பின் தனது சரீரத்தை இரண்டாகப் பிரித்துக் கொண்டான். அதினின்று பதி பத்னிகள் தோன்றி னார்கள். ஆகையால் இது ஒரு கடலையின் பாதி போன்றது. இவ்வுலகம் ஸ்திரீயினால் பூர்த்தியாகிறது. 1.4.7.) எவனொ ருவன் இவற்றை ஒவ்வொன்றாகப் பிரித்து உபாசிக்கின்றா னோ அவன் அறிந்தவனல்லன். ஒவ்வொன்றாகப் பிரிப்பதால் இது பூர்ணத்துவ மற்றதாகிறது. ஒரே ஆத்மாவாகத்தான் உபாசிக்க வேண்டும். 1.4.10.) இப்போதும் எவனொருவன் இவ்வாறே ''நான் பிரம்மமாயிருக்கிறேன் அஹம் பிரஹ்''- மாஸ்மி) என்று அறிகிறானோ அவன் இது அனைத்துமாக ஆகிறான். அவனுடைய பெருமையைக் குறைவு படுத்த தேவராலும் இயலாது அவன் அவர்களுக்கும் ஆத்மா.

2.1.17.) இந்த விஞ்ஞானமயமான புருஷன் தூக்க நிலையில் தன் விஞ்ஞான சக்தியால் இந்திரியங்களின் சக்தி களைக் கவர்ந்து கொண்டு, இருதய ஆகாசத்தில் அந்தராத்மா விடம் ஒடுங்குகிறான். அவற்றை (இந்திரிய சக்திகளை) எப்போது உட்கவர்கின்றானோ அப்போதேஇப்புருஷன் தூங்கு கிறான் என்பது பிரசித்தம். அப்போது கிராணேந்திரியம் (முகரும் சக்தி) வாக்கு, கண், மனதும் உட்கவரப்படுகின்றது. (மனோமய விஜ்ஞானமய கோசங்களும் போர்வைகள் தான், பொய்யாகிய உடம்பு மெய்யெனப்படுவது உள்ளே மெய்ப் பொருளிருத்தலால்) 2.3 2.) பிருதிவி அப்பு தேயு இவை உருவமுடையன, அழிவுடையன, ஓரிடத்துள்ளன, இவை பிரத் தியக்ஷம். இவற்றின் ஸாரம் எரிக்கும் சூரிய மண்டலம். வாயு, ஆகாசம் இவற்றின் ஸாரம் ஆதித்திய புருஷன். பிராணனின் ஸாரம் ஆத்மா. 2.4.9.) வீணை வாசிக்கும் போது வெளி

வரும் ஸ்வரங்களை எங்ஙனம் தனியாக எடுத்துக் கொள்ள இயலாதோ. ஆனால் வீணையின் பொது நாதத்திலும், வீணை வாசிப்பின் ஒலி அலைத் தொடர்பிலும் உள்ளடங்கியே பற்றப் படுமோ அவ்வாறே சப்த ஜாலமாகிற உலகம் ஆத்மாவிற்குப் புறம்பாகப் பிடிபடாது. (பரம் பொருள் மற்றப் பொருள்களில் உள்ளோடு நிற்பதை அறிந்து அப்பொருளின் வழியாகவே அதை அடைய முடியும். ஒலியை மட்டும் எடுத்துக் கொள்ள முடியாதது போல) 2.5.19.) இவ்வாத்மாவே பிரம்மம். எல்லாவற்றையும் அனுபவிப்பது. இது முடிவான உபதேசம்.

3.4.1.) எந்த ஆத்மா அனைத்தினுள்ளும் உறைவது? எந்த ஆத்மா பிராண வாயுவால் பிராணனை இயக்குகிறதோ அந்த உமது ஆத்மாதான் அனைத்துள்ளும் உறைவது (ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி களுக்கு ஸாக்ஷியான கூடஸ்தன்) 3,5.1.). பசி, தாகம், சோகம் (ஆசை பூர்த்தியாகாததால் ஏற்படும் துன்பம்) மோஹம் (ஒன்றை வேறொன்றாக எண்ணி மயங்குதல்), மூப்பு, மரணம், இவைகளை எல்லாம் கடந்து இருப்பது தான் ஆத்மா. பிராமணன் அடைந்த பாண்டியத்தை வெறுத்து ஞானத்துடன் பல மட்டும் நிற்கிறான். பின் பாண்டித்தியத்தையும் ஞானபலத்தையுங்கூட விடுத்து மனனத்தில் ஆழ்ந்த முனியாகிறான். பின் மௌனமின்மையையும் மௌனத்தையும் விடுத்து பிரம்ம ஞானியாகிறான், (கடைந்தெடுத்த வெண்ணெய் மறுபடியும் நீருடனும் மோருடனும் கலக்காது, மேலேயே மிதக்குவது போல் பிரம்ம ஞானியின் மனம் மக்கள், பொருள், உலக ஆசைகளில் கலக்காது பிரம்மத்தினிடமே திரண்டு நிலைபெறும்; ஸ்திதப்ரஜ்ஞன் என)

3.7.1.) எந்த ஸூத்திரத்தினால் இகமும் பரமும் எல்லா உயிர்களும் ஒன்றாகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன? இகத்தையும் பரத்தையும் எல்லா உயிர்களையும் உள்ளிருந்து ஆட்டிவைக்கும் அந்தர்யாமியை அறிவீர்களா? 3.7.2.) வாயுவினாலேயே இகமும் பரமும் எல்லா உயிர்களும் ஒன்றாகக் கட்டப்பட்டுள்ளன வாயுவே ஸூத்திரமாம்.

3.8.6.) எது வானத்திற்கு மேலும், பூமிக்குக்கீழும், வானத்திற்கும் பூமிக்கும் இடையிலும் உள்ளதெனவும், எது இறந்த காலத்திலும், நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும் உள்ளதெனவும் கூறப்படுகிறதோ அது எதில் குறுக்கும் நெடுக்குமாகக் கோக்கப்பட்டுள்ளது? 3.8.7. ஆகாயத்தில்கோக்கப்பட்டுள்ளது. 3.8.8.) ஆகாயம் குறுக்கும் நெடுக்குமாகக்

கோக்கப்பட்டிருக்கும் அது அக்ஷரம் என பிரம்ம ஞானிகள் கூறுகிறார்கள். 3.8.9-10) இந்த அக்ஷரத்தை அறியாமல் ஒருவன் இவ்வுலகை விட்டுச் சென்றால் அவன் கிருபணன் (பெரும் பேற்றை எய்துதற்குறிய மனிதப் பிறவியை அடைந்தும் அதைப் பயன் படுத்திக் கொள்ளாமல் வீணாக்குபவன்) எனப்படுவான்; (அவன் கருமமாகிற பணத்தினால் விலைக்கு வாங்கப்பட்ட அடிமை போன்றவன்). இந்த அக்ஷரத்தை அறிந்து கொண்டு ஒருவன் இவ்வுலகை விட்டுச் சென்றால் அவன் பிராம்மணன் எனப்படுவான். 3.8.11.) இந்த அக்ஷர வஸ்துவில் தான் ஆகாயம் குறுக்கும் நெடுக்குமாகக் கோற்கப் பட்டிருக்கிறது. (அதுவே எல்லை, பர்ாகதி, ப்ரஹ்மம்)

4.1.6 ) பிரம்மத்திற்கு இருப்பிடம் எது? மனம் தான் அதின் ஆயதனம். ஆகாசம் பிரதிஷ்டை, அதை ஆனந்தம் என்று உபாசிக்க வேண்டும். 4.3.2.) சூரியன்தான் ஒளி; சூரிய ஒளியாலேயே இவன் இருக்கிறான்; வெளியே செல் கிறான்; வேலை செய்கிறான்; திரும்பி வருகிறான்.

4.3.6.) சூரியனும் அஸ்தமித்துச் சந்திரனும் அஸ்த மித்து அக்கினியும் ஒடுங்கி வாக்குங்கூட மௌனமாகிவிட் டால் இந்தப் புருஷனுக்கு ஒளியாவது எது? ஆத்மாவே இவனுக்கு ஒளியாகிறது. ஆத்மஒளியாலேயே இவன் இருக்கி றான் வெளியே செல்கிருன், வேலை செய்கிருன், திரும்பி வரு கிறான் .4.3.7.) எந்த ஆத்மா பிராணன்களுக்கு (இந்திரிய வியாபாரங்களுக்கு)விஜ்ஞானமயமாகவும்இருதயத்தில்உள்ளே புருஷனாகிய ஒளியாகவும் உள்ளதோ அது இகத்தும் பரத்தும் தியானம் செய்வது போலும் ஊசலாடுவது போலும் சஞ்சரிக் கிறது. அது தியானத்தில் இவ்வுலகைத் தாண்டிச் செல்கிறது. அது ஸ்வப்னத்திலிருந்து சாவினால் கவரப்பட்ட வடிவங் களுடைய இவ்வுலகத்தைத் தாண்டிச் செல்கிறது 4.3.8)இந்தப் புருஷன் பிறக்கும் போது சரீரத்தையடைந்து பாவங்களுடன் கூடுகிறான். சாகும் போது சரீரத்தை விட்டுக் கிளம்பிப் பாவங் களை உதறி விடுகிறான் 4.3.9.) ஸ்வப்ன ஸ்தானத்தில் நின்று கொண்டு இந்த இகலோகத்தையும் அந்த பரலோக ஸ்தானத்தையும் இரண்டையும் பார்க்கிறான். எப்போது தூங்குகிறானோ அப்போது எல்லாவற்றையும் தன்னுள் ளடக்கிக் கொண்டிருக்கும் இவ்வுலகினின்று ஒரு அம்சத்தை எடுத்துக் கொண்டு, தன்னையே ஸம்ஹரித்துத் தன்னை மீண்டும் சிருஷ்டித்துக் கொண்டு, தன்னுடைய காந்தியால், தன்னுடைய ஒளியால் கனவு காண்கிறான். இங்கு இந்தப்புரு ஷன் ஸ்வயஞ்ஜோதியாகிறான். 4.3.14.) இவனுடைய

விளையாட்டு வனத்தை எல்லோரும் பார்க்கிறார்கள். இவனைப் பார்ப்பவர் எவரும் இல்லை. 4.3.15) இவன் புண்ணியத்தையும் பாவத்தையும் பார்த்துக் கொண்டு மகிழ்ந்து திரிந்துவிட்டுத் துன்பம் நீங்கிய நிலையை அடைகிறான். சென்ற வழியிலேயே திரும்பி மீண்டும் ஸ்வப்னாவஸ்தைக்கு வருகிறான். அங்கு எதைைப் பார்க்கிறானோ அதனால் தொடரப்படுவதில்லை; புருஷன் பற்றில்லாதவன்.

4.3.18) எங்ஙனம் ஒரு பெரிய மீன் இரு கரைகளுக்கும் முன்னும் பின்னும் சென்று சஞ்சரிக்குமோ அங்ஙனமே இப் புருஷன் ஸ்வப்னம் ஜாக்கிரமாகிய இருநிலைகளுக்கும் சென்று சஞ்சரிக்கிறான். 4.3.19) எங்ஙனம் ஒரு பருந்தோ கருடனோ வானவெளியில் பறந்து களைத்துப் போய்ச் சிறகுகளை அசையாமல் பரப்பிக்கொண்டு கூட்டை நோக்கிச் செல்லுமோ அங்ஙனமே இப்புருஷன் ஆழ்ந்து உறங்கும் எந்நிலையில் ஒரு ஆசைக்கும் ஆசைப் படுவதில்லையோ ஒரு கனவையுங் காண்பதில்லையோ அந்நிலையை நோக்கி ஆர்வத்துடன் செல்லுகிறான். இது தான் ஒப்புயர்வற்ற நிலை.

4.3,21) எங்ஙனம் பிரியமான மனைவியால் இறுகத் தழுவப்பெற்ற நிலையில் ஒருவன் உள்ளும் புறம்மும் யாதொன்றையும் அறியமாட்டானோ அங்ஙனமே இந்தப் புருஷன் ஸ்ஷுப்தியில் பிராஜ்ஞனாகிய ஆத்மாவால் தழுவப் பெற்று உள்ளும் புறமும் யாதொன்றையும் அறிவதில்லை. ஆசைகள் பூர்த்தியான நிலை, துன்பங்கடந்த நிலை, இதுதான் ஆத்மா ஒன்றே விரும்பப்படும் நிலை (ஆத்ம காமம்)

4.3,32) (த்ரஷ்டாவாகிய) இவன் (நீரில் விடப்பட்ட) நீரைப்போல் ஒன்று பட்டவனாகவும் இரண்டற்றவனாகவும் ஆகிறான். இதுதான் பிரம்மலோகம், பராகதி, உயர்ந்த உலகம், பரமானந்தம். இந்த ஆனந்தத்தின் ஒரு திவலையைக் கொண்டுதான் பிரிதான பிராணிகளெல்லாம் வாழ்கின்றன. 4.3.33) மனிதர்களுள் அங்கங்களின் வன்மை நிறைத்தவனாகவும், செல்வம் நிறைந்தவனாகவும், பிறரை ஆள்பவனாகவும், மனிதர் விரும்பும் போக சாதனங்கள் அனைத்தும் சூழப் பெற்றவனாகவும் உள்ளவன் எவனோ அவனே மனித ஆனந்தத்தின் எல்லையிலுள்ளவன் இதன் நூறு பங்கு பிதிரர்களினுடையது; இதன் நூறு பங்கு கந்தர்வர்களுடையது; இதன் நூறு பங்கு கர்மதேவர்களுடையது; இதன் நூறு பங்கு பிறவி தேவர்களுடையது; இதன் நூறு

பங்கு பிரஜாபதியுடையது; இதன் நூறு பங்கு பிரம்ம லோக ஆனந்தம்; எவன் வேதத்தைக் கற்றுணர்ந்து, பாவமற்ற வாழ்க்கை நடத்துபவனாய், ஆசைகளில் ஆழ்ந்து மடியாதவனாய் வேதத்தைக் கற்றுணர்ந்து உள்ளவனோ அவனுடைய ஆனந்தம் பரம ஆனந்தம் இதுதான் பிரம்மலோகம்.

4.4.2.) (அந்திய காலத்தில்) ஜீவாத்மாவைப் பின்பற்றி முக்கியப் பிராணன் செல்லுகிறது. முக்கியப் பிராணனைப் பின்பற்றி மற்ற எல்லாப் பிராணன்களும் இந்திரியங்களும் செல்லுகின்றன. பின் இவன் (ஸ்வப்பனத்தில் போல்) விஜ்ஞான வடிவினன் ஆகிறான். அவ்விஜ்ஞானத்தை யனுசரித்து (வேறொரு சரீரத்தில்) புகுகிறான், அறிவின் வாசனையும் கர்மவாசனையும் முந்தய நிகழ்ச்சிகளின் பிரஜ்ஞையும் தொடர்ந்து செல்லுகின்றன. 4.4.4) ஒரு தட்டான் எங்ஙனம் ஒரு தங்கக் கட்டியினின்று ஒரு சிறு பகுதியை எடுத்துப் புதியதாயும் அழகாயும் உள்ள வேறு உருவத்தை அமைப்பானோ அங்ஙனமே இந்த ஜீவன் உடலை விட்டு அதை உயிரற்றதாய் வீழ்த்தி விட்டு புதியதாயும் அழகாயும் உள்ள வேறு உருவத்தைப் பிதிருக்கள் உலகுக்குத் தகுந்தவாறோ, பிரஜாபதி, உலகுக்குத் தகுந்தவாறோ, பிரம்மாவின் உலகுக்குத் தகுந்தவாறோ அல்லது மற்ற ஜீவர்களின் உலகுக்குத் தகுந்தவானோ குணகர்மங்களுக்குத் தக்கபடி சிருஷ்டித்துக்கொள்ளுகிறான். புண்ணிய பாவ செயல்களுக்கு தக்கபடி ஆகிறான். 4.4.5) இப்புருஷனை ஆசைவடிவினன் எனக்கூறுவர். ஆசைப்படி நிச்சயம் ஏற்படுகிறது. நிச்சயப்படி செயல் செய்கிறான். செயல்படி பயனை அடைகிறான். 4.4.6) எவன் ஆசை இல்லாதவனோ, ஆசையிலிருந்து விடுபட்டவனோ ஆசைகளின் பூர்த்தி எய்தியவனோ, ஆத்மா ஒன்றையே விரும்பு வபனோ அவனுடைய பிராணன்கள் கிளம்பி எங்குஞ் செல்வ தில்லை, பிரம்மமாகவே இருந்து அவன் பிரம்மத்தில் ஐக்கிய மாகிறான்.

4.4.15.) உண்டாயதற்கும் உண்டாகப்போவதற்கும் இறைவனாயும், ஒளிவடிவினனாயும் உள்ள ஆத்மாவை ஒருவன் எப்போது ஸாக்ஷாத்தாகக் கண்டு கொண்டானோ அப்போது தனக்கு வேறான தேகத்தின் ஸம்ரக்ஷணையை விரும்புவதில்லை. (ஒற்றுமை காண்பதால் பயமில்லை) 4.4.21) பிரம்ம நாட்டமுடைய புத்திமான் இதை அறிந்து பிரஜ்ஞையை அடையட்டும். பல சாஸ்திரங்களை அப்பியாஸம் செய்ய வேண்டாம். அது வாக்குக்குச் சிரமமேயாகும். 4.4.23) அறிந்தவன் அமைதியுடையவனாகவும் அடக்கமுடை

யவனாகவும் ஆசைகளை விட்டவனாகவும் பொறுமை உடையவனாகவும் ஆத்ம நிஷ்டனாகவும் ஆகித் தன்னிடத்திலேயே ஆத்மாவைக் காண்கிறான், எல்லாப் பாவங்களையும் தாண்டுகிறான், எரிக்கிறான். அழுக்கற்ற சந்தேகமற்றவனாகிறான்.

5 2.4.1–3) தேவர்கள் மனிதர்கள் அசுரர்களாகிய தன் மக்களுக்கு தனித்தனியாக பிரஜாபதி 'த' என்ற இவ்வக்ஷரத்தைக் கூறித் தெரிந்து கொண்டீர்களா என்றார். தேவர்கள் த–தாம்யத–அடக்கமுடையவர்களாயிருங்கள் என்றும்; மனிதர்கள் த–தத்த–தானம் செய்யுங்கள் என்றும்; அசுரர்கள் த–தயத்வம்–தயை யுடையவர்களாயிருங்கள் என்றும் தாங்கள் உபதேசித்தீர்கள் என்றனர். ஆம் நீங்கள் தெரிந்து கொண்டது சரி என மூவர்களிடமும் தனித்தனியாகக் கூறினார். இந்த தெய்வ வாக்கையே மேகம் ததத, தாம்யத–தத்த–தயத்வம், தமம்–தானம் தயை என்று திரும்பிச் சொல்லுகிறது. இம் மூன்றையும் அப்பியசிக்க வேண்டும் (மனிதர்களிடையே எல்லா நற்குணங்களும் பொருந்தியிருந்தும் இந்திரிய அடக்கமற்றவர்கள் தேவர்கள். லோபித்தனம் மிக்கவர் மனிதர்கள், இச்சையும் குரூர ஸ்வபாவமும் உடையவர்கள் அசுரர்கள். ஆகையால் மூன்றும் மனிதர்க்கே கூறப்பட்டவை)

5.3.1) எது ஹிருதயமோ (புத்தியோ) அதுதான் பிரஜாபதி. அதுதான் பிரம்மம். 5.5.2) அந்த ஸத்யம் தான் இந்த ஆதித்யன். சூரியமண்டலத்திலுள்ள புருஷனும் கண்ணில் உள்ள புருஷனும் இருவரும் ஒருவரிடம் ஒருவர் இருக்கின்றனர். கிரணங்களால் அவன் இவனிடமும். பிராணன்களால் இவன் அவனிடமும் இருக்கின்றனர். இவன் எப்போது கிளம்பும் சமயமோ அப்போது அம்மண்டலம் சுத்தமாய்த் தோன்றுகிறது. அதன் பின் கிரணங்கள் இவனை நாடி அடைவதில்லை.

5.8.6) இந்தப் புருஷன் மனோமயமானவன். அவன் தான் அனைத்துக்கும் ஈசுவரன், அதிபதி. அடக்கியாள்பவன். 5.8.1)(வேத)வாக்கைக் கறவைப் பசு எனஉபாசிக்க வேண்டும் அதற்கு முலைக் காம்புகள் நான்கு; ஸ்வாஹாகாரம், வஷட்காரம், ஹந்தகாரம், ஸ்வதாகாரம். அவற்றில் ஸ்வாஹாகாரம் வஷட்காரம் இரண்டையும் பற்றித் தேவர்கள் ஜீவிக்கிறார்கள்; ஹந்தகாரத்தால் மனிதர்களும், ஸ்வதாகாரத்தால் பிதிருக்களும் ஜீவிக்கிறார்கள். (பிராணனால் வாக்குப் பிறப்பதால்) அப்பசுவுக்கு உரிய ரிஷபம் பிராணன். (மனதின்

தூண்டுதலால் மேற்கூறிய கர்மங்களின் பெருக்கம் ஏற்படுவ தால்) அப்பசுவுக்கு மனது கன்றுக் குட்டியாம். (ஸ்வாஹா-நான் எனதிலிருந்து விடுபடுதல்) 5.11.1.) நோயால் பீடிக்கப் பட்டுவருந்துதல், உடலைச் சுடுகாட்டுக்குக் கொண்டு போதல், உடலைத் தீயில் இடுதல் இவைகளுங்கூட பெருந்தவம் என்று எவன் அறிகிறானோ அவன் உயர்ந்த உலகை அடைகிறான். (நல்லவருங்கூட வெல்லப் பொம்மையைப் போல் துன்பத்தால் உருக்கப்பட்டுத்தான் திருவடிவம் பெறவேண்டும்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

தத் த்வமஸி (சாந். 6–9.3; 10.1; 11.3; 12.3; 13.2; 14.2)
அஹிம்ஸன் ஸர்வபூதா (சாந். 8. 15. 1.)
அயமாத்மா ப்ரஹ்ம ஸர்வானுபூ (ப்ருஹ. 2.5.19)
த–த–த இதி தாம்யத, தத்த, தயத்வ மிதி, ததே தத்–த்ரயம்
சிக்ஷேத்–தமம், தானம், தயாமிதி (ப்ருஹ. 5.2.3)
ஸத்யம் ஹ்யேவ ப்ரஹ்ம (ப்ருஹ. 5.4.1)

சர்வலோக சாக்ஷியாகி ஸகலவேத ஸாரமாகி
ஸகலயோக சித்தியாகி நின்ற மூர்த்தியே
ஸகலஸத் துவங்களாகிப் பரமஞான வித்தையாகி
சகலசப்த வடிவ்மாகி வந்த மூர்த்தியே (இஷ்டஜபம்)

அருண ஸகுண நிலையிலாகி அசரசர விபாகமாகி
அதிலுமாகி இதிலுமாகி அமையும் மூர்த்தியே
அணுவுளே அகண்டமாட அணுவினால னைத்துமாட
அபரநாத வடிவிலாடும் அருண மூர்த்தியே (ஜபம்)

எனது நானெனச் செறுக்கி மமதையுற்றலைந்த என்னை
இனியனாக்கி இனையவைத்த இன்ப மூர்த்தியே
எனதுளத்தி லுனதுநாமம் எழுதிவைத்து நடனமாடி
ஏகமா யெனைக்கலந்த யோக மூர்த்தியே (ஜபம்)



உட்கார்ந்திருப்போர் : திருமதி. ஜெயலக்ஷ்மி ராமநாதன், செல்வி R. V சம்பூரணி,
திரு. R. T. P. ராமநாதன்
நிற்போர் : திருமதி. மல்லிகாதங்கராஜ், திரு. R. தங்கராஜ், திரு. R. பிரகாஷ்,
திரு. R. வெங்கடேஷ், திருமதி. ரத்னாவெங்கடேஷ்

ஸ்ரீ பரப் ப்ரஹ்மனே நம :

# தசோபநிஷத்





விவேகம் வைராக்யம் முன்நிற்க ஜீவ ப்ரஹ்ம ஐக்யம்
ப்ரஹ்மம்–இருப்பாய் இருப்பது சத்; பகுத்தறிவாய்
இருப்பது சித்; சுகமாய் இருப்பது ஆனந்தம்.
ஆத்மாவும் சத் சித் ஆநந்த ஸ்வரூபம்.

வாக்குவாய் அசையாமல் மவுனங்கொண்டு
வாசிவரு மிடத்தில் மனம் வைத்துக் காத்து
நீக்குவாய் வாசியோடு மனந்தா ன்புக்கு
நினைவதனி லடங்கிவரும் வரிசை காணே.

பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படும் ஒருபொறி
சளியும் நீரும் தவழும் ஒருபொறி
உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி
வளியும் மலமும் வழங்கும் ஒருவழி
சலமும் சீயும் சரியும் ஒருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டகம் முடிவில் சுட்டெலும் பாகும்

அன்றே தடுத் என்னை ஆண்டுகொண்டாய் கொண்டது அல்லவென்கை
நன்றே உனக்இனி நான்என் செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற் றுகைநின் திருவுளமே
ஒன்றே பலவுரு வேயரு வேஎன் உமையவளே

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவ
தொன்றேயு மில்லை உனக்கே பரம்எனக் உள்ளஎல்லாம்
அன்றே உனதென் அளித்துவிட் டேன்அழி யாதகுணக்
குன்றே அருட்கட லேஇம வான்பெற்ற கோமளமே.

ஓம் பிரம்மா முதலாக பிரம்ம வித்யா சம்பிரதாயத்தை அருளிச் செய்தோருக்கும், வம்ச ரிஷிகளுக்கும், மகான்களாகிய குருக்களுக்கும் நமஸ்காரம். ஆதியில் பிரம்மாவைப் படைத்து, அவனுக்கு வேதங்களை கொடுத்து அருளியவன் எவனோ, நமக்குள்ளிருந்து நமது புத்தியைப் பிரகாசிக்கச் செய்பவன் எவனோ அந்த தேவனை மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணமடைகிறேன்.

| பக்கம் | வரி | பிழை | பிழை திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 3 | 9 | கிரகணங்களைச் | கிரணங்களைச் |
| 3 | 13 | ஸோனஹமஸ்மி | ஸோஅஹமஸ்மி |
| 7 | 25 | ஒளி இருள் | (ஒளி இருள்) |
| 8 | 19 | இந்த ஆத்ம | இந்த ஆத்மா |
| 8 | 29 | அந்தக்காரணங்களின் | அந்தக்கரணங்களின் |
| 10 | 12 | கரும் பலனாகிய | கரும பலனாகிய |
| 16 | 19 | விராத்தியன், ரக ரிஷி | விராத்தியன், ஏக ரிஷி |
| 16 | 35/36 | தாக்குகிறது | தாங்குகிறது |
| 17 | 17 | இரண்டாலும் | இரண்டும் கலந்திருப்பதால் |
| 21 | 15 | நிருக்தம், சந்தம், | நிருக்தம், சந்தசு, |
| 22 | 30 | மலான அக்ஷரப் | மேலான அக்ஷரப் |
| 24 | 33 | பக்ஷகள்-ஜீவனும் | பக்ஷிகள்—ஜீவனும் |
| 25 | 18 | அந்த தேவையான | அந்த தேவயான |
| 26 | 35 | முடக்ஷுக்களுக்கு | முமுக்ஷுக்களுக்கு |
| 27 | 38 | பாதங்கள்: ஆகாரம் | பாதங்கள்: அகாரம் |
| 28 | 21 | கானும் அஜ்ஞான | காணும் அஜ்ஞான |
| 30 | 2 | காரணமாகிய | காரியமாகிய |
| 31 | 32 | முதலியவை ஸ்ரீயை | ஸௌபாக்கிய ஸ்ரீயை |
| 32 | 7 | சாம வேதங்கள் | — வேதங்கள் |
| 33 | 38 | அன்னஸ மயத்தினும் | அன்ன ரஸ மயத்தினும் |
| 34 | 29 | நிற்குண | நிர்குண |
| 37 | 34 | (ஐத.3.3.) | (ஐத.3.3. ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம) |
| 40 | 36 | கிரகணங்களில் | கிரணங்களில் |
| 44 | 32 | ஆகசமும் | ஆகாசமும் |
| 45 | 17 | வீரர் பற்றின | பற்றின |
| 46 | 28 | என உடலிலுள்ள | என் உடலிலுள்ள |
| 48 | 29 | மேதாய மது | மேதயா மது |
| 50 | 32 | (பார்த்தாவின் | (பர்த்தாவின் |
| 50 | 35 | (இன்மையும் | (இம்மையும் |
| 52 | 1 | சாதோக்யோபநிஷத் | சாந்தோக்யோபநிஷத் |
| 52 | 20 | உபாசிக்கும் | உபாசிக்க |
| 52 | 21 | பாவம் அனுகாது | ப்பாவம் அணுகாது |
| 53 | 19 | மர்னாக்கனுக்கு | மாணாக்கனுக்கு |
| 58 | 18 | அந்தக்காரணம் | அந்தக்கரணம் |
| 59 | 18 | ஸுப்தியில் | ஸுஷுப்தியில் |
| 59 | 31 | உயந்த ஒளியை | உயர்ந்த ஒளியை |
| 60 | 29 | ஜய) தைத்நாரா 56 | (ஜய தைத். நாரா. 56) |
| 61 | 21 | அஹம் பிரஹ்" மட்டும் | அஹம் பிரஹ்மாஸ்மி |
| 62 | 19 | ஞானத்துடன்பலமட்டும் | ஞானபலத்துடன்மட்டும் |

குருர் ப்ரஹ்ம குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேஸ்வர :
குருர் ஸாக்ஷாத் பரப் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம :

நெரூர் ஸ்ரீ கைலாச ஆஸ்ரம ஸ்தாபகரும், குமாரபாளையம் ஆனந்தாஸ்ரமம் போஷகருமாய் இருந்த,

## ஸ்ரீ ல ஸ்ரீ சதாசிவானந்த சுவாமிகள்



அவதாரம் கீலக ஸ்ரீ பங்குனி மீ எழு வ 1908
மஹாசமாதி இரக்தாட்சி ஸ்ரீ மார்கழி மீ 29 வ 1985

சங்கராய சங்கராய சங்கராய மங்களம்
சங்கரீ மனோஹராய சாஸ்வதாய மங்களம்
குருவராய மங்களம் கஜானனாய மங்களம்
ராஜாராம மங்களம் வேணுகிருஷ்ண மங்களம்
சீதாராம மங்களம் ராதா கிருஷ்ண மங்களம்,

ஸ்ரீ பழனியப்பா பிரஸ், கொமாரபாளையம் - 638183.

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது – பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

ஸர்வ மங்கல மாங்கல்யே ஸிவே ஸர்வார்த்த ஸாதகே
ஸரண்யே த்ர்யம்பகே கௌரீ நாராயணீ நமோஸ்துதே.






உட்கார்ந்திருப்போர் : R. வெங்கடேஷ், J.K.K. முனிராஜா, அன்னை J.K.K. சம்பூரணி அம்மாள் (J.K.K. முனிராஜா & ஜெயலக்ஷ்மி ராமநாதனின் அன்னை) R.T.P, இராமநாதன், R. பிரகாஷ்,
நிற்போர் : வசந்தகுமாரி முனிராஜா, R. தங்கராஜ், ஜெயலக்ஷ்மி ராமநாதன்,

ஆஞ்சநேயரைப் பார்த்து இராமர், ''நீ என்னை எங்ஙனம் கருதுகிறாய் என்று கேட்டதற்கு, ஆஞ்சநேயர் '' நீ பிரபு, நான் தாசன். என்னிடத்து ஜீவபோதம் இருக்கிற பொழுது நீ பூரணன், நான் அதில் ஓர் அம்சம் என்னிடத்து ஆத்ம போதம் தலையெடுக்கும் பொழுது நீயே நான், நானே நீ'' என்றார். (ஸ்ரீ இராமகிருஷ்ணர் உபதேசங்கள்–732)





R.T.P. இராமநாதன் செட்டியார், பவானி.

ஸ்ரீ இராமகிருஷ்ணர் உபதேசங்கள்